# கல்கி

KALKI 9.7.89 ரூ. 2.

MUNICIPAL OFFICE

# ஜெ. தொகுதிக்கு ஒரு விசிட்!





'கல்கத்தா பவானிபூரில், அடுக்கு மாடிக் கட்டடம் ஒன்று, அப்படியே சீட்டுக் கட்டைத் தட்டி விட்ட மாதிரி விழுந்து நொறுங்கியது. இன்னும் யாரும் குடி வராத புதிய கட்டடம். கீழே படுத்து உறங்கிக் கொண்டிருந்த கட்டடத் தொழிலாளர்களில் பதினேழு பேர் மாண்டனர்' என்று ஒரு செய்தி.

இது எப்படி நடக்கும்? புத்தம் புதிய கட்டடம் இம்மாதிரி தடதடவென்று சரிந்து விழுவது ஏன்?

கட்டடக் கலை வல்லுநர்கள் மற்றும் மதிப்பீட்டாளர் சங்கத் தலைவர் சி. எச். கோபிநாத் ராவ் சொன்னார்:

''கட்டடம் கட்டுபவர் மிக மோசமான சிமெண்டைக் கொடுத்திருக்கிறார் என்று மட்டுமே செய்தியில் வந்திருக்கிறது. டிசைனில் தவறு இருந்திருக்கலாம். அல்லது டிசைன் சரியாக இருந்தும், கட்டுமானப் பணியில் கோளாறு இருந்திருக்கலாம். Column எனப்படும் தூண்களில், கம்பிகளை வெல்டிங் முறையில் இணைக்க வேண்டும். இல்லை என்றால், ஒன்றோடு ஒன்று இணைக்கும் போது, கம்பியின் விட்டத்தைப் பொறுத்து இணைப்பின் நீளம் இருக்குமாறு இணைக்க வேண்டும். இது போதாமல் இருந்திருக்கலாம். சிமெண்ட் கலவை மோசமான தரத்தில் இருந்திருக்கலாம். அங்கே கட்டடம் கட்டுவதற்கு முன்னால் நிலத்தைப் பரிசோதித்துப் பார்த்தார்களா என்று தெரியவில்லை. முன்பு ஏரி இருந்திருக்கக்கூடும். அல்லது நிலத்துக்கு அடியில் ஒன்றுமே இல்லாமல் வெற்றிடமாக இருந்திருக்கலாம். நிலத்தைப் பரிசோதித்துப் பார்த்து, அதன் தன்மையை அறிந்து அடித்தளம் அமைத்திருக்க வேண்டும். நெய்வேலியில் சில வருடங்களுக்கு முன்பு இதுபோன்ற சம்பவம் ஒன்று நடந்தது. அந்த நினைவில்தான் இதைச் சொல்லுகிறேன்.''

# அடுக்குமாடிக் கட்டடம் விழுவதேன்?



* ராஜேந்திர ராஜு.



* சி. எச். கோபிநாத் ராவ்.

கட்டடக் கலை நிபுணர் ராஜேந்திர ராஜு சொன்னார்:

''குறிப்பிட்ட எண்ணிக்கையில் தளங்கள் அமைக்க டிசைன் செய்து விட்டுக் கூடுதலாகத் தளங்களைப் பிறகு சேர்த்திருக்கக் கூடும். அந்தக் கனம் தாங்காமல் கட்டடம் இடிந்து விழுந்திருக்கக் கூடும். அஸ்திவாரம் போடும் போது, மேலே அமையப்போகும் கட்டடத்தின் பாரத்துக்குத் தகுந்த மாதிரி போட வேண்டும். இதில் ஏதாவது வித்தியாசம் இருந்தால் கட்டடம் சரியக்கூடும். நிலத்தைப் பொறுத்தும் இது நிகழும். மண், சகதி, மணல் பாங்கு என்று, நிலத்தில் எது கூடுதலாக இருக்கிறது என்பதைப் பரிசோதித்து அறிய வேண்டும். பாறை மாதிரி கடினமானதாக இருந்தால் அதிகக் கனம் தாங்கும். இவை எல்லாம் ஊகங்களே. கல்கத்தாவில் என்ன நிகழ்ந்தது என்று நேரிடையாகப் பார்த்து அறியாமல் உண்மையான காரணத்தைச் சொல்லுவது கடினம்.''

இங்கு புதிய அடுக்கு மாடி ஃப்ளாட் ஒன்றில் குடியேறிய குடும்பம் ஒன்றைச் சந்தித்துக் கேட்டோம். ''முன்னெச்சரிக்கையாக நீங்கள் ஏதும் செய்தீர்களா?''

''காண்ட்ராக்டர் மீது உள்ள நம்பிக்கை... கட்டடம் கட்டும் போது அவ்வப்போது வந்து பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்பதால், கட்டுமானப் பொருள்களைச் சரியாகத்தான் உபயோகிக்கிறார்கள் என்ற தைரியம்... எல்லாவற்றுக்கும் மேல், கடவுளின் மேல் பாரத்தைப் போட்டு விட்டுத்தான் கிருகப்பிரவேசம் செய்கிறோம்!''

— சாருகேசி



* தெருவெங்கும் அசிங்கம்தான்



* உழைப்புக்கு அஞ்சாத பெண்கள்



* சுந்தர்ராஜன்



* போடி அரண்மனை

# ஜெ. தொகுதிக்கு

**போ**டிநாயக்கனூர் என்ற பெயர் எப்படி வந்தது? மதுரையில் திருமலை நாயக்கர் ஆண்ட போது, மேற்குத் தொடர்ச்சி மலையின் சில பகுதிகள் கேரள





ராமசாமி நாயுடு

# ஒரு விசிட்!

அரசர் பூனையாத்துத் தம்பிரான் ஆளுகையில் இருந்தது. தம்பிரானின் பகுதியில், கொம்பு முளைத்த காண்டா மிருகம் போன்ற பயங்கரக் காட்டுப் பன்றி ஒன்று அட்டகாசம் செய்து கொண்டு இருந்தது. இதனால் விவசாயம் செய்வதற்கே மக்கள் பயந்தனர். பூனையாத்துத் தம்பிரான் அந்தக் காட்டுப் பன்றியை வேட்டையாடும் நபருக்குத் தக்க சன்மானம் வழங்கப்படும் என்று பட்டி தொட்டிகளிலெல்லாம் தமுக்கடிக்கச் செய்தார். எவ்வளவோ பேர் முயன்றும் முடியவில்லை.

அந்தச் சமயத்தில் திருமலை நாயக்கரின் அரண்மனையில் மன்னருக்கு நம்பிக்கையான பாதுகாப்பாளராக வேலைப் பார்த்துக் கொண்டிருந்தவர் போடிநாயக்கர். வாட்டசாட்டமான உருவம். திருமலைநாயக்கரின் கட்டளையை ஏற்றுக் கொண்டு அட்டகாசம் செய்து வரும் பன்றியை ஒழிக்கப் புறப்பட்டார். மலைப் பகுதிகளில் பன்றியைத் தேடி அலைந்து, ஒருநாள் அது எதிர்கொண்ட போது, கையிலுள்ள ஈட்டியால் சம்ஹாரம் செய்தார்! பூனையாத்துத் தம்பிரான் மகிழ்ந்து போய், 'நீர் ஒரு நாளில், எவ்வளவு தூரம் ஓடுகிறீரோ அந்தப் பகுதியை உமக்கே சன்மானமாகக் கொடுக்கிறேன்' என்றார். ஓடினார் போடிநாயக்கர். கிட்டத்தட்ட நாற்பத்தெட்டுக் கிராமங்களை ஓடி வளைத்தார். அவையெல்லாம் பிறகு போடிநாயக்கனூர் என்று அழைக்கப்பட்டன. இதுதான் போடிநாயக்கனூரின் வரலாறு என்று சொல்கிறார்கள்.

இன்றைய நிலையோ தலைகீழ். போடிநாயக்கனூர்த் தெருக்களில் கூட்டம், கூட்டமாக அலைந்து கொண்டு நகரத்தையே அசுத்தமாக்கிக் கொண்டு திரியும் பன்றிகளைப் பார்த்தால், போடிநாயக்கரால் கொல்லப்பட்ட பன்றி சாகும் போது, 'வருங்காலத்தில் எனது சந்ததிகளாலேயே போடிநாயக்கனூர் அசுத்தப்படும்' என்று ஏதாவது சாபம் கொடுத்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது!

**ம**துரை – கம்பம் சாலையில் தேனியைத் தாண்டிய பிறகு, வலது கைப் பக்கத்தில் சாலை ஒன்று மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடரை நோக்கிச் செல்கிறது. ஊருக்குள் நுழைந்தவுடன் நம்மை வரவேற்பவர் சிலையாக நிற்கும் கட்டபொம்மன். அவருக்குப் பின்னால் பழைய காலத்து மாளிகை ஒன்று. போடி அரண்மனை. அங்குதான் போடிநாயக்கரின் வாரிசுகள் வசித்து வந்தார்களாம். போடியில் தெருத் தெருவாக அலைந்து சென்றால், முக்குலத்தோரில், எத்தனை உட்பிரிவுகள் என்றும், தேவாங்கு செட்டியார், மற்றும் கவுடர்களின் உட்பிரிவுகள் என்ன என்பதையும் தெரிந்து கொள்ளலாம். ஆம்! அத்தனை சாதிச் சங்கங்கள்.

நதிக்கரை நாகரிகம் என்று சொல்வார்கள். ஆனால் போடியைப் பொறுத்தவரை சாக்கடைக் கால்வாய் நாகரிகம்தான். வீட்டுக்கு வீடு உயரமான வாசல்படி. படியின் கீழ் நாற்றமடிக்கும் சாக்கடை ஓடுகிறது. அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் தங்கள் வேலைகளைக் கவனிக்கும் மக்கள்.

இவ்வளவு அசுத்தமான ஊரில் ஆஸ்பத்திரியாவது நல்ல நிலையில் இருக்க வேண்டாமா? மக்கள் எவரும் உள்ளூர் ஆஸ்பத்திரியை நம்புவதேயில்லை. 'பிடி டாக்ஸியை' என்று நோயாளிகளைத் தூக்கிக் கொண்டு மதுரைக்குத்தான் ஓடுகிறார்கள். சாலைகளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். ரோடு ரோலர் கூட போகச் சிரமப்படும்!

இத்தனை சோதனைகளையும் தாண்டி அரண்மனை அக்ரஹாரத் தெருவிற்குச் சென்றோம். அங்குதான் குடியிருக்கிறார் போடி நகர சபைத் தலைவர் முத்து மனோகரன் (தி.மு.க.). இப்போது நகர சபைத் தலைவர் என்பதை விட ஜெயலலிதாவை எதிர்த்துப் போட்டியிட்டவர் என்ற வகையில் பிரபலம் அடைந்துள்ளவர்.



* எஸ். இளங்கோவன்



* சாந்தி

# ராஜினாமா செய்யட்டும்...

ஜெயலலிதாவை சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுத்த போடி நகர மக்களைச் சந்தித்தோம்.

**குருமணி:** நன்னடத்தைச் சான்றிதழ், முதியோர் பென்ஷன் போன்ற விஷயமாக எம்.எல்.ஏ.வைப் பார்க்க வேண்டுமென்றால் எங்கே போய்ப் பார்ப்பது? ரொம்பக் கஷ்டப்படுகிறோம். ஏதோ பக்கத்துத் தொகுதிகளிலுள்ள தி.மு.க. எம்.எல்.ஏக்கள் உதவுவதால் சமாளிக்கிறோம். இது மாதிரி ஓர் எம்.எல்.ஏ. எங்களுக்குத் தேவை தானா? என்று இப்போது யோசிக்கிறோம்.

**எஸ். இளங்கோவன்:** காணாமல் போய் விட்ட எங்க ஊர் எம்.எல்.ஏ. பற்றிக் கேட்கறீங்க. வெட்கக்கேடு! கட்சியிலுள்ள மேல் மட்டத் தலைவர்களுக்கே அந்தம்மா எங்கே போறாங்க... வர்றாங்கன்னு தெரியலை... எங்களுக்கு என்ன தெரியும்? என்னமோ... 'ஜெயிச்சாத் தொகுதியில் ஆபீஸ் வைப்பேன்; குறைகளைக் கேட்பேன்'னு அடுக்கினாங்க.. இப்போ ஆளைத் தேட வேண்டியதாக இருக்கு.

**ஜியாவுதீன்:** எங்க வீட்டுப் பெண்கள் உதய சூரியனுக்குத்தாங்க போட்டாங்க. இந்தம்மா எங்களுக்குப் புதுசு. 'எங்களுக்கு உதவ எப்பவுமே இருக்காருங்க சேர்மன். (அதாவது தி.மு.க.வைச் சேர்ந்த நகர சபைத் தலைவர் முத்து மனோகரன்)

**சுப்பிரமணி:** நான் இலவம் பஞ்சு விவாசயிகள் சங்கத்தைச் சேர்ந்தவன். அந்தம்மா ஜெயித்தவுடன் எங்கள் சங்கத்தைச் சேர்ந்த பலருடன், மாலை வாங்கிக் கொண்டு சென்னை சென்றோம். போயஸ் தோட்டத்தில் எங்களை உள்ளேயே விடவில்லை. போனது வேஸ்ட். தொகுதி மக்களுக்கே அந்தம்மாவிடம் இவ்வளவுதான் மரியாதை!

**சாந்தி:** அந்தம்மா தேர்தல் சமயத்துல



* சுப்பிரமணி

"நான் என்னங்க செய்ய முடியும்? நகர சபை வருமானம் முப்பது லட்சம்னா, 24 லட்சம் சம்பளத்துக்கே போயிடுது. அப்புறம் மின்சாரக் கட்டணம், அது இது என்று ஏகப்பட்ட செலவுகள். தெரு விளக்குகள் எல்லாம் எரிகின்றன. சாலைகள் சரியில்லை. நகரம் அசுத்தமாக இருக்கிறது — ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அரசிடம் எங்கள் குறைகளை எடுத்துச் சொன்னால் பாதாளச் சாக்கடை போன்றவைகளை நிறைவேற்றுவதற்கு முன்னுரிமை தர மாட்டேனென்கிறார்கள். போதாததற்கு முன்பு நகர சபைக்குக் கமிஷனரும் கிடையாது. சுகாதார அதிகாரியும் கிடையாது. ஏதோ எங்கள் அரசு வந்ததால், இப்போது தான் போராடி ஆட்களைப் போட வைத்திருக்கிறேன். சமீபத்தில்தான் அமைச்சர் பொன் முத்துராமலிங்கம் வந்து சில திட்டங்களுக்குத் திறப்பு விழாவும், அடிக்கல்லும் நாட்டி விட்டுச் சென்றார்," என்றார்.

அமைச்சர் வந்த போது, முனிசிபாலிடி கட்டடத்தின் வெளிப்புறத்தை மட்டும் பளிச்சென்று சுண்ணாம்படித்து

* கே.எம்.எஸ். சுப்பிரமணியன்





இங்கே வந்த போது நான் ஆரத்தி எடுத்தேன். ஐந்து ரூபாய் போட்டாங்க. 'எனக்கு ஓட்டுப் போடுங்க... உங்க கஷ்டத்தையெல்லாம் தீர்த்துடுறேன்' னாங்க... என் கணவர் என்னை விட்டுட்டுப் போயிட்டார். என் வயதான அம்மா இருக்காங்க. நான் வீட்டு வேலை செய்து சமாளிக்கிறேன். எங்க அம்மாவுக்கு முதியோர் பென்ஷன் வாங்கலாம்னா எந்த எம்.எல்.ஏ.கிட்டப் போய்ச் சொல்றது?

**மகாதேவன் (பிராமணர் சங்கம்):** எவ்வளவோ வாக்குறுதிகள் கொடுத்தாங்க. பதினெட்டாம் கால்வாய்த் திட்டம், கண்மாய்களைத் தூர் எடுத்தல் என்று ஏகப்பட்ட வாக்குறுதிகள். ஆபீஸ் வைப்பேன்னாங்க.. ஒண்ணும் நடக்கலை. மக்களை மதிக்கறதுன்னாப் பதவியில் இருக்கட்டும். இல்லையேல் ராஜினாமா செய்யட்டுமே!

* ஜியாவுதீன்

**கே.எம்.எஸ். சுப்பிரமணியன் (முன்னாள் அ. தி. மு. க. எம்.எல்.ஏ.):** எங்க தலைவர் தேர்தலின் போது சொன்ன திட்டங்களை ஆளுங்கட்சியாக நாங்கள் வந்தால்தான் செய்வோம்னு சொன்னாங்க.

* மகாதேவன்



* குருமணி

பொதுவாகவே எதிர்க்கட்சி எம்.எல்.ஏக்களின் தொகுதிகளை ஆளும் கட்சி கண்டுக்காது. அதுவும் எதிர்க்கட்சித் தலைவர் தொகுதின்னாக் கண்டுக்கவே மாட்டாங்க... நன்னடத்தைச் சான்றிதழ், முதியோர் பென்ஷன் விவகாரமாக எம்.எல்.ஏவைத்தான் பார்க்க வேண்டும் என்ற அவசியம் இல்லை! முக்கிய பிரமுகர்களைப் பார்த்தாலே போதும்; தேவையான சான்றிதழ்கள் கிடைக்கும். மேலும் பெயர் போடாமல் நன்னடத்தைச் சான்றிதழ்களில் என்னிடம் தலைவர் கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருக்காங்க. யாராவது என்னிடம் வந்தால் நான் கொடுப்பேன். சென்னைக்குச் சென்றாலும் பார்க்க முடியவில்லை என்று சொல்வது சரியல்ல. நானே எவ்வளவோ முறை பார்த்திருக்கிறேன். மேலும் தொகுதியிலிருந்து பல பேர் சென்று பார்த்திருக்கிறார்கள். தலைவர் எங்கே இருக்காங்க என்பது பொது மக்கள் கவலைப்பட வேண்டிய ஒன்றல்ல. எம்.ஜி.ஆர். பாலிசியை தொடரறாங்க. தேவையான போது வெளியே வருவாங்க. எங்களைப் போன்ற முக்கியஸ்தர்களுக்கெல்லாம்(!) அவுங்க எங்க இருக்காங்கன்னு தெரியும். கூடிய விரைவில் தொகுதியில் ஆபீஸ் திறக்கப்படும்.

---

வைத்தார்கள். பத்து வருடமாக ஓட்டை உடைசலாக இருக்கும் குப்பை லாரியைக் கண்ணில் காட்டாமல் மறைத்து வைத்து இருந்தனராம். இதைவிட வேடிக்கை, அந்தக் குப்பை லாரி இன்னும் நல்ல நிலையில் இருப்பதாக ரிகார்டுகளில் இருக்கிறதாம். போதாதற்கு ஏற்கெனவே இயங்கிக் கொண்டிருக்கும் திட்டங்களுக்குத்தான் திறப்பு விழா என்ற பெயரில் மந்திரி வந்து பம்மாத்துப் பண்ணியிருக்கிறார். உதாரணம்: ஏற்கெனவே இயங்கிக் கொண்டிருக்கும் குடி தண்ணீர்ச் சுத்திகரிப்பு நிலையம்!

(குடி தண்ணீர் என்றவுடன், போடி தண்ணீரை இன்னும் குடிக்க மாட்டோமா என்று தொண்டை ஏங்குகிறது. போடியில் ஆறுதலளிக்கும் விஷயம் குடிதண்ணீர்தான். சுவையான குடிநீர், மலை உச்சியில் இருந்து தானாகவே கீழே ஓடி வந்து நகரெங்கும் பாய்கிறது. 1937—ல் 28,000 மக்களுக்குப் போடப்பட்ட திட்டம், இன்று மக்கள் தொகை 80,000 என்றாலும் பஞ்சம் இல்லை!)

முழுக்க, முழுக்க விவசாயத்தை நம்பி



நிருபர்: ''நீங்க நடிக்க வராட்டா என்ன செய்திருப்பீங்க?''

நடிகை: ''நர்ஸரி ஸ்கூல் படிப்பை முடிச்சுட்டு நர்ஸ் ஆகியிருப்பேன்!''

— இளை. அ. கதிர்வேல்.

யிருக்கும் மக்கள். ஏலம், மாங்காய், தேங்காய், இலவம்பஞ்சு என்று பயிரிடுகிறார்கள். ஏலக்காய்தான் போடியின் பொருளாதார நாடியை பிடித்துப் பார்க்கும் பயிர். இந்த ஆண்டு செமை மாம்பழ விளைச்சல். போடி தெருக்களில் மாம்பழங்களாகக் கொட்டிக் கிடக்கின்றன. ஆயினும், ''இந்த வருடம் விலையே கட்டுபடி ஆகலிங்க. டன் மூவாயிரம் ரூபாய்க்கு விற்ற மாம்பழம் இன்று 1,500 ரூபாய்க்குத்தான் விற்கிறது. அதுலேயும் பலத்த போட்டி'' என்று வருத்தத்துடன் சொல்கிறார் மாம்பழ வியாபாரி சுந்தர்ராஜன்.

ஏலக்காய் பயிரிடுவது கேரள மலைச் சரிவுகளில் என்றாலும் பெரும்பாலான ஏல விவசாயிகள் கம்பம், போடி பகுதியைச் சேர்ந்தவர்கள்தாம். ஏல விவசாயிகள் சங்கத்தின் தலைவரான ரவீந்திரனைச் சந்தித்த போது, ஏல விவசாயிகள் மிகுந்த நெருக்கடிக்கு ஆளாகி இருப்பதாகச் சொன்னார்:

''ஏலப் பயிர் கிட்டத்தட்ட நூறு வருடங்களாக இந்தப் பகுதியில் பயிரிடப்பட்டு வருகிறது. இந்தியாவில் மொத்த உற்பத்தி சுமார் 4000 டன். அதில் 95 சதவீதம், கேரளா, கர்நாடகா, தமிழ்நாட்டில்தான் விளைகிறது. எங்கள் சங்கத்தில் ஆயிரம் உறுப்பினர்கள் இருக்கிறார்கள். பெரும்பாலோர் சிறு விவசாயிகள். நவம்பர், டிசம்பரில் செடியிலிருந்து ஏலக்காயை எடுப்போம். வாரத்திற்கு இரண்டு ஏலம் விடப்படும். இந்தியாவில் பல பகுதிகளிலிருந்து வியாபாரிகள் வந்து ஏலத்தை ஏலத்தில் எடுப்பார்கள். முன்பெல்லாம் 90 சதவீதம் வெளிநாடுகளுக்குச் சென்று கொண்டு இருந்தது. ஆனால், இப்போது 'கவுதிமாலா' என்ற சின்னஞ்சிறு மத்திய அமெரிக்க நாடு ஒன்று பெருமளவு ஏலக்காய் உற்பத்தி செய்து, நமது ஏற்றுமதி மார்க்கெட்டைப் பிடித்து விட்டது. இப்போது ஏற்றுமதி நமது உற்பத்தியில் ஐந்து முதல் பத்து சதவீதம் தான். மீதிச் சரக்குக்கு உள் நாட்டிலேயே மார்க்கெட் தேட வேண்டியதாக இருக்கிறது.

''விற்பனை விஷயத்தில் இந்த அடி என்றால் உற்பத்தியிலும் செலவுகள் படு பயங்கரமாக உயர்ந்து விட்டது. உரம், பூச்சி மருந்துகளின் விலை ஏறி விட்டது. அது மட்டுமல்ல; ஏல விவசாயிக்குப் பன்னிரண்டு விதமான வரிகள். இந்த வரிகளையெல்லாம் ஒன்றுபடுத்திக் காம்பவுண்டு வரியாகப் போடுங்கள் என்று அரசிடம் போராடிக் கொண்டிருக்கிறோம். மொத்தத்தில் ஏதோ நாங்கள் நிலங்களை வைத்துக் கொண்டிருப்பதால், பயிர் செய்து கொண்டிருக்கிறோமே தவிர படு நஷ்டத்தில்தான் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறோம்.''

''முற்றிலும் விவசாயப் பகுதியான இந்தப் பகுதியில் விளையும் பொருட்களை அடிப்படையாக வைத்து தொழிற் சாலைகள் கொண்டு வர முடியாதா?''

''மாம்பழக் கூழுக்குத் தற்சமயம் கிராக்கி ஏற்பட்டு இருக்கிறது. மாம்பழ உற்பத்தி இந்தப் பகுதியில் பிரமாதமாக இருப்பதால் மாம்பழக் கூழ் தொழிற்சாலை கொண்டு வரலாம். இங்கு உற்பத்தியாகும் இலவம் பஞ்சின் பெரும் பகுதியைக் காதி வாரியமே வாங்கிக் கொள்கிறது. இது தவிர, உள்ளூரிலேயே இந்தப் பஞ்சைப் பயன்படுத்தி மெத்தை, தலையணை தயாரிக்கும் பல சிறிய தொழிற் கூடங்கள் இருக்கின்றன!'' என்றார் அவர்.

விவசாயத்துக்குத் தற்சமயம் தண்ணீர்ப் பஞ்சம் இல்லாவிட்டாலும்கூட, தண்ணீரைச் சேமித்து வைக்கும் கண்மாய்கள் சரியாகப் பராமரிக்கப்படாததால், கூடிய விரைவில் அதற்கும் பிரச்னை வரலாம்,'' என்று சொல்கிறார் விவசாயியும், பத்திரிகை ஏஜெண்டுமான ராமசாமி நாயுடு. கொட்டக்குடி ஆற்றில் ஓர் அணை கட்ட வேண்டும் என்றும் கூறுகிறார்.

**போ**டியில், மாலை வேளையில் மனத்துக்கு அமைதி வேண்டுமானால், சுப்பிரமணியசாமி கோயிலுக்கும், சீனிவாச பெருமாள் கோயிலுக்கும் செல்லலாம். அதிலும் சீனிவாச பெருமாள் கோயிலில், ஆண்டாளின் பிறப்பு முதற்கொண்டு திருமணம் வரையிலும் வடித்து வைத்திருக்கும் சிற்பங்களைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். நன்றாகப் பராமரிக்கிறார்கள்.

ஓர் ஆச்சரியமான விஷயம், போடி மக்கள் அவ்வளவாகச் சினிமாப் பார்ப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை என்பது. அதனால் நகரிலுள்ள ஆறு தியேட்டர்களில் மூன்று விற்பனைக்குத் தயாராக இருக்கிறதாம்!

— **ப்ரியன்.**

மேலட்டையில் ஜெ. வண்ணப்படம்: **ரவிசங்கரன்.**

போடி பிரதான கடைத்தெரு வண்ணப் படமும், கட்டுரைப் படங்களும்: **ஸ்ரீஹரி.**

# Another command performance...
## Many new records set.

**HIGHLIGHTS OF OUR WORKING AS AT 31-3-1989.**

| | |
|---|---|
| **CAPITAL:** | |
| Paid-up | : Rs 3.09 Crores |
| Reserves | : Rs. 7.49 Crores |
| Internal Generations (Reserves + Depreciation) | : Rs. 13.93 Crores |
| **Earning Per Share of Rs 10** | : **Rs. 13.35 *** |
| **SECURED LOANS - LIMITS:** | |
| Banks | : Rs 4 Crores |
| IDBI | : Rs 5 Crores |
| UTI | : Rs 3 Crores |
| **DEPOSITS:** | |
| **No. of Depositors** | : **1,40,853 *** |
| Amount outstanding | : Rs. 68.06 Crores |
| **Nett Accretion during the year** | : **Rs. 24.87 Crores *** |
| **ADVANCES:** | |
| **No. of Borrowers** | : **68,478 *** |
| Amount advanced | : Rs. 81.25 Crores |
| Value of assets financed | : Rs. 110 Crores |
| No. of vehicles financed | : 5,099 |
| Employment generated | : 1,00,000 |
| No. of consumer durable advances | : 63,379 |
| No. of Beneficiaries | : 63,379 families or over 3 lakhs persons. |
| **OWNED ASSETS:** | |
| **Value of land, buildings, Vaults, etc** | : **Rs. 5.83 Crores *** |
| **OFFICES AND VAULTS:** | |
| No. of offices spread over 6 States | : 37 |
| No. of Safe Vaults | : 20 |
| **SOCIO-ECONOMIC BENEFITS PROVIDED TO** | 5 lakh persons. |

**All within a period of four years! Truly, without precedent - without parallel!**

* Highest in the Industry, consisting of about 450 units.




# SAKTHI FINANCE LTD

Executive Chairman : S.N. PAI,
Regd. Office : 475, Dr. Nanjappa Road, COIMBATORE - 641 018.

UIPC-SF-12/89



* ஆலமரம் பழையபடி தூக்கி நிறுத்தப்பட்ட பிறகு...

# அடையாறு ஆலமரம் மீண்டும் துளிர்க்குமா?

உலகத்தில் உள்ள தாவரவியல் நிபுணர்களை எல்லாம் ஆச்சரியத்தில் அசத்திய ஆலமரம் அது! மணல்பாங்கான இடங்களில் அதுவும் கடற்கரையோரம் ஆலமரங்கள் வளர்ந்த வரலாறே கிடையாது. அதுவும் நாற்பதாயிரம் சதுர அடிப் பரப்பில் படர்ந்திருக்கும் மரம்! அது இப்போது சூறாவளியில் சிக்கிச் சாய்ந்து கிடந்தது. அடையாறு ஆலமரம் விழுந்த செய்தி அறிந்ததும் இந்திய ராணுவத்தினரும், சென்னை துறைமுகத் துறையினரும் மற்றும் தாவரவியல் துறை வல்லுநர்களும் வந்து கூடி விட்டார்கள்.

மரம் விழுந்த சில மணி நேரங்களில் காயம்பட்ட இடங்களைச் சுத்தம் செய்து காளான்கள், நுண்கிருமிகள் புகாமல் மருந்து தடவப்பட்டது. வேர் மற்றும் கணுப் பகுதிகளில் எப்போதும் ஈரப்பதம் இருக்கும் வகையில் வைக்கோல் கட்டப்பட்டுத் தண்ணீர் தெளிக்கப்பட்டது.

ஜூலை 23—ஆம் நாள் காலை—

* காயம் பட்ட இடங்களில் கட்டுக்கள்.



* தூக்கி நிறுத்த ஆரம்பிக்கிறார்கள்.

ஒரு வாரமாய் விழுந்து கிடக்கும் தாய் மரத்தின் இலைகள் கொஞ்சமும் வாடாமல் பசுமையாய்க்காட்சி அளித்தன. மரத்தினைத் தூக்கி நிறுத்துவதற்கு இரண்டு கிரேன்கள் கொண்டுவரப்பட்டன. 35 அடி உயரத் தாய் மரத்தை நான்கு கம்பிக் கயிறுகள் பிணைத்தன.

தேங்காய், பழம், பூக்கள் வைத்து மந்திரம் ஓதி தீபாராதனை முடிந்ததும் கிரேன் இயங்கிற்று. தவிர நான்கு திசைகளிலும் வடம் பிடித்து இழுத்தார்கள். சிறிய போராட்டத்திற்குப் பின் மரம்,

வெட்டப்பட்ட குழிக்குள் செங்குத்தாய் நின்றது. செம்மண் மற்றும் என்.பி.கே. உரம் செலுத்தி மூடப்பட்டது. புதிய வேர்கள் உருவாகி மரம் சுயமாய் நிற்கும் வரை நான்கு திசைகளிலும் கம்பிக் கயிறு கள் கூடாரக் கயிறு போல் பரவி மரத்தி னைத் தாங்கிக் கொள்ளும்!

**பா**ர்வையாளராக வந்திருந்த சில தாவரவியல் பேராசிரியர்களிடம் பேசிய போது, "சிறிய மரம் என்றால் உறுதியாகக் கூறலாம். ஆனால் இது மிகவும் வயதான மரம். எனவே மரம் மீண்டும் அதே நிலைக்கு வரும் என்று தீர்மானமாகக் கூற முடியாது. இது ஒரு பரிசோதனை முயற்சி! அவ்வளவுதான்," என்று கூறினார்கள்.

"இந்த மரம் உயிர் பிழைக்கும் என்று எப்படிச் சொல்ல முடியும்?" பிரம்மஞான சபையின், தோட்ட மேற்பார்வையாளரைக் கேட்டோம். பி. டி. வெங்கடேஷ் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்:

"'நிச்சயம் உயிர் பிழைக்கும்' என்று பிரபல தாவரவியல் நிபுணர் டாக்டர். எம். எஸ். சாமிநாதன் அவர்களும் பிற தோட்டக் கலை அறிஞர்களும் விழுந்த மரத்தினை ஆராய்ந்து பார்த்து விட்டு நம்பிக்கை தெரி வித்துள்ளார்கள். மரம் மீண்டும் வேர் விடுவதற்குத் தேவையான ஹார்மோன்கள் நேரடியாகத் தொடர்ந்து கொடுக்கப்படும். புதிய கிளைகள் உருவாவதற்கும் மரம் செழித்து வளர்வதற்கும் தேவையான சத்துக்களை ஸ்பிரே செய்து இலைகள் மூலம் செலுத்த உள்ளோம். தேவையான கால கட்டத்தில் தேவையான உரங்களை இடுவோம். தூக்கி நடப்பட்ட தாய் மரத்து டன் மற்ற விழுதுகளிலிருந்து வரும் கிளை களை இணைத்துள்ளோம். மூங்கில்களில் இயற்கை உரங்களை நிரப்பி மரத்தின் விழுதுகளை அதற்குள் நுழைத்து நன்கு வளர்வதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. எனவே அதிசய மரம், மீண்டும் வளர்ந்து இன்னுமோர் அதிசயத்தைப் படைக்க உள்ளது!"



— **பாரதிபாலன்**

புகைப்படங்கள்: **யோகா.**

* கற்பூர ஆரத்திக்குப் பிறகு....




# "உயிரைப் போக்க ரயிலில் விழவேண்டாம்; பயணம் செய்தாலே போதும்!"

## நன்றி சொல்ல வேண்டும் நண்பனுக்கு

●● திருவழுந்தூரில் நண்பன் ஒருவன் வீட்டில் டி.வி. வாங்கினார்கள். மாலையில் அவனது இல்லத்திற்குச் சென்றோம். அப்போதுதான் டி.வி.யை இறக்கியிருந்தார்கள்.

வசதியான கோணத்தில் டேபிளை வைத்து, டி.வி. வைக்கும் பெட்டியை வைத்து, அதனுள் டி.வி. வைக்கப்பட்டது. டி.வி. ஸ்விட்ச் இயக்கப்பட்டது. எதுவுமே தெரியவில்லை திரையில். பிறகு தெரிந்தது கரண்ட் கட் என்று. பத்து நிமிடங்கள் சென்றபின் கரண்ட் வந்தது. நண்பர்கள் மகிழ்வுடன் மீண்டும் டி.வி.யை இயக்க மீண்டும் ஏமாற்றம். பார்த்தால் டி.வி. ஒயர், ப்ளக்குடன் இணைக்கப்படவில்லை. பின் இணைக்கப்பட்டும்கூட திரையில் டிஸைன், டிஸைனாய்த் தெரிந்ததே அன்றி ஒளி, ஒலி எதுவுமில்லை. பூஸ்டர், ஸ்டெபிலைஸர், ஸவுண்ட், கலர், க்ளியர், ப்ரைட்—டார்க், சேனல், ப்ளக்... என்று நண்பர்கள் அனைவரும் ஆளுக்கு ஒன்றை அட்ஜஸ்ட் செய்ய.. ம்ஹூம், நடக்கவில்லை காரியம். ஒரு நண்பன் கூறினான். "மேல போயி ஆன்டெனாவை அட்ஜஸ்ட் பண்ணிட்டு வாங்கப்பா!"

"ஆன்ட்டெனாவா! அதான் இன்னும் வைக்கலியே!" என்றானே பார்க்கலாம் என் நண்பன். ஆன்ட்டெனா பொருத்துபவர் லீவ் போட்டு விட்டு எங்கோ போய் விட்டாராம். டி.வி. பார்க்காவிட்டாலும் கடைசியில் நாங்களெல்லாம் நண்பனை வாழ்த்தி நன்றி சொல்லி விட்டு (டீ கொடுத்தானே!) நல்லவிதமாக வீடு வந்து சேர்ந்தோம்.

— அ. முஹம்மது நிஜாமுத்தீன், நீடூர்.

## ரயில் முன் விழத் தேவையில்லை!

●● 'ஒருவர் வாழும் ஆலயம்' திரைப்படத்திலிருந்து காண்பிக்கப்பட்ட திரைமலர் நிகழ்ச்சியை அனைவரும் பார்த்துக் கொண்டிருந்தோம். காதலுக்குத் தடையாக இருக்கும் அப்பாவை மீற முடியாமலும் காதலனின் யோசனைப்படி வீட்டை விட்டு வெளியேறி அவனைத் திருமணம் செய்து கொள்ள மனமில்லாமலும் தவிக்கும் கதாநாயகி ரயிலுக்கு முன் விழுந்து தற்கொலை செய்து கொள்வதற்காக ரயில் பாதையில் நடந்து கொண்டிருக்கிறாள். எதிர்ப்புறத்திலிருந்து ரயில் அவளை நோக்கி வந்து கொண்டிருக்கிறது.

இந்தக் காட்சியின் போது பக்கத்திலிருந்த என் அண்ணன் சொன்னார். "உயிரைப் போக்கிக்கறதுக்கு ஏன் ஓடற ரயில் முன்னால விழணும்? அதிலே ஏறி உக்காந்திருந்தாலே போறுமே. உயிர் கண்டிப்பாப் போயிடும்!" ரயில் விபத்துக்கள் அதிகம் நடக்கும் இந் நாளில் அவரது கமெண்ட் வீட்டில் சிரிப்பலையை எழுப்பியது.

— ஆர். உமா மஹேஸ்வரன், சென்னை.

## இப்படியுமா உபயோகப்படும்?

●● ஒருமுறை நான் சென்னை செல்ல வேண்டி (வீடியோ கோச்) ஆம்னி பஸ் ஒன்றில் பிரயாணம் செய்தேன். டிக்கெட் நாலு ரூபாய் அதிகம். (ஏன் சார் தயங்கறீங்க 4 ரூபா அதிகம்னு பாக்காதீங்க மூணு சினிமா போடுவாங்க சார்! டிக்கெட் விற்ற கடைக்காரர்) இரவு 9.30 மணிக்குப் பஸ்ஸில் ஏறி முன் பகுதியில் அமர்ந்தேன். (படம் தெளிவாகப் பார்க்க வேண்டுமே!) அப்போது படம் போடப்படவில்லை. சரி! சரி பஸ் புறப்பட்டதும் போடுவார்கள் போலும் என எண்ணினேன். பத்து மணிக்குப் பஸ் புறப்பட்டது. படம் போடவில்லை.

பஸ் சேத்தியாத் தோப்பு என்ற ஊரில் நின்றது. டிரைவர் பஸ் உள்ளே வந்தார். சரி இனியும் தயக்கம் கூடாது கேட்போம் என்று எண்ணி நான் எழுந்த போது, டிரைவர் சர்வ சாதாரணமாக வீடியோவின் ஸ்கிரீனை ஒரு அலமாரி கதவைத் திறப்பது போல ஒயிலாகத் திறந்து உள்ளே கையை 'விட்டு ஒரு டவல், ஒரு சோப்பு டப்பா இவற்றை எடுத்துக் கொண்டு முகம் கழுவக் கீழே இறங்கியதைக் கண்ட போது நான் முகத்தில் அசடு வழிய வாழ்க்கையே வெறுத்துச் சீட்டில் சரிந்து விழுந்தேன்!

— சி. பாலசுப்பிரமணியன், அம்மாப்பேட்டை.

## புது டூ—இன்—ஒன்!

●● மனைமாட்சி என்ற பகுதியில் இன்றைய மாடர்ன் உடைகள், (பேகீஸ், லூஸ் பிட்டிங் சர்ட்ஸ்) எவ்வாறு அதை வெட்டுவது, தைப்பது என அத்துறையைச் சேர்ந்த வயதான ஒரு பெண்மணியும், மற்றொரு பெண்மணியும் உரையாடிக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு மாடலையும் எப்படி வெட்டுவது என ஒருவர் விளக்கிக் கொண்டும், அதை வெட்டியும், கையால் தைத்தும் காண்பித்துக் கொண்டிருந்தார். இவற்றைப் பற்றிச் சந்தேகங்கள் கேட்டுக் கொண்டிருந்த மற்றொருவர், இதை யார் யார் போடலாம் என ஒரு கேள்வி கேட்டார். அதற்கு அந்தப் பெண்மணி இதை ஆண், பெண் இருவரும் அணியலாம் எனக் கூறினார். அப்பொழுதுதான் வீட்டிற்குள் நுழைந்திருந்த எனது தம்பி, அவர் அவ்வாறு கூறியவுடன், "அம்மா இதோ பாருங்கள் ஒரு புது டூ—இன்—ஒன்" எனக் கூற, "எங்கே?" என அம்மா திருப்பிக் கேட்க, வீடே சிரிப்பில் ஆழ்ந்தது.

— ந. சண்முகசுந்தரம், சென்னை — 45.

## ஏனிந்த வேறுபாடு?

●● கடந்த வாரம் 12.6.89 இரவு தேசிய ஒளிபரப்பில் ஒன்பது மணியளவில் "டாக்டர் சாகேப்" நாடகத்தில் ஒரு காட்சி. அதில் தமிழ் பேசும் தமிழ் நாட்டுப் பெண் இடம் பெறும் ஒரு காட்சியில் மிகவும் சுமாரான—நிறம் குறைந்த—தலையில் அதிக எண்ணெய் தேய்த்துக் கொண்டு — தமிழைக் கொலை செய்து பேசிக் கொண்டு ஒரு பெண் நடித்தாள். இங்கு என்ன அழகான வர்களே இல்லையா? இங்கு என்ன தமிழைக் கொலை செய்தா பேசுகிறோம்? தமிழர்கள் என்றால் கேலிக்கூத்தாகப் போய் விட்டதா? ஆனால் வடக்கே உள்ள வர்கள் என்றால் அழகாகப் பேசி, நல்ல உடை உடுத்திக் காண்பிக்கிறார்களே! ஏன் இந்த வேறுபாடு?

— சி.டி.கே. சாமி, சென்னை.

## "எனக்கும் அப்படித்தானா?"

●● செவ்வாய்க் கிழமை இரவு ஏழு மணிக்குக் 'காரி ஆன் குட்டித்தாத்தா' தொடர் நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. அதில் அசட்டுத்தனமாக நடிக்கும் ஒரு பெண் தன் தந்தையிடம் 'அப்பா அடுத்த வாரத்துக்குள் எனக்குக் கல்யாணம் ஆயிடும்பா' என்கிறாள். அதற்கு அவர், 'ஐயோ உன் நட்சத்திரம் மூல நட்சத்திர மாச்சே. உன் பேரைச் சொன்னாலே உனக்கு மாமனாராக வரப் போகிறவர் மண்டையைப் போட்டு விடுவார். உனக்கு எப்படிக் கல்யாணம் ஆகும்?' என்கிறார். இதைக் கேட்ட பதினொரு வயதான என் பெரிய பெண் 'அம்மா எனக்கும் மூல நட்சத்திரம்தானே. அப்போ கல்யாணமே ஆகாதா?' என்று கேட்டவுடன் எனக்குச் சிரிப்பு வந்தது. 'இல்லை ஜோக்கிற்காக அவர் சொல்கிறார்' என்று சொன்னேன். ஆனால் வசனம் எழுதுகிறவர்கள், டி.வி. பார்ப்பவர்கள் மனம் புண்படாமல் இருக்க அனாவசியப் பத்தாம்பசலி வசனங்களைத் தவிர்க்க வேண்டும்.

— இந்திரா கோபாலன், திருச்சி — 14.

## பெண்ணென்ன? ஆணென்ன?

●● எனக்கு ஐந்து வயதில் ஒரு பெண் குழந்தை உள்ளது. சில மாதங்களுக்கு முன் இரண்டாவது பெண் குழந்தை பிறந்தது. பிரசவத்திற்குத் தாய் வீடு செல்லும் போது என் மாமியார், 'ஆண் குழந்தைதான் பெற்றுக் கொண்டு வர வேண்டும்' என்றார். அவர் அப்படி சொன்னவுடன் இதெல்லாம் நம் கையிலா இருக்கிறது என்று எண்ணினேன். என்ன ஆச்சர்யம்! குழந்தை பிறந்ததும் விலையுயர்ந்த புது கவுன்களுடன் என்னைப் பார்க்கச் சந்தோஷமாக வந்தார் என் மாமியார். டி.வி.யில் ஒளிபரப்பாகும் 'சரஸ்வதி மாதிரி என் மருமகள். அவள் வயிற்றில் லக்ஷ்மி மாதிரி ஒரு மகள் பிறக்கப் போகிறாள்' என்றும், அதற்கு மருமகள், 'ஆண் குழந்தையாக இருந்தாலென்ன? பெண் குழந்தையாக இருந்தாலென்ன? கடவுள் ஆசியிலே குழந்தை ஆரோக்கியமா இருக்கட்டும்' என்று கூறும் விளம்பரத்தைக் கேட்டு மனம் திருந்தியதாகச் சொன்னார். வாழ்க! விளம்பர மாமியார்! மருமகள்!

— எஸ். ராதா ஸ்ரீனிவாசன், சென்னை — 4.






# கல்கி

1989 ஜூலை 9
மலர் 47 இதழ் 49
சுக்ல ஆனி 25




## அரசியல்வாதி நிலையிலிருந்து அரசியல் ஞானி நிலைக்கு...

'எம்.ஜி.ஆர். ஆரம்பித்த பணியாயிற்றே, நாம் ஏன் அதைத் தொடர வேண்டும்? முன்பு அ.தி.மு.க. அரசு நாம் ஆரம்பித்த வீராணம் திட்டத்தை அம்போ என்று விட்டு விடவில்லையா?' என்று முதல்வர் நினைக்கவில்லை. மாறாக, ஆந்திர முதல்வரைச் சந்தித்து, இருபதே நிமிஷங்களில் ஒரு நல்ல முடிவுக்கு வந்தார். யாருக்குமே புரியாத காரணங்களுக்காக எம்.ஜி.ஆர். முன்பு நிறுத்தி வைத்திருந்த தவணைத் தொகைகளைத் தருவதாக ஒப்புக் கொண்டார். அடுத்தாற்போல் தரப்பட வேண்டிய தொகைகளுக்கும் நடக்க வேண்டிய காரியங்களுக்கும் ஒரு திட்டம் வகுத்துத் திரும்பியிருக்கிறார். இதன் மூலம், குடிநீர் கஷ்டத்தை வருஷா வருஷம் அனுபவித்து வரும் சென்னைவாசி ஒவ்வொருவருடைய நன்றிக்கும் பாத்திரமாகியிருக்கிறார். இங்கே, இப்போது நிலத்தடி நீருக்குக் கூடப் பஞ்சம் வந்து விட்டது மட்டுமல்ல; மிக அதிகமாக நிலத்தடி நீர் எடுக்கப்படுவதால் கடல் நீர் உட்புகுந்து எல்லாமே உப்புமயமாகி விடும் அபாயமும் அதிகரித்திருக்கிறது. இந்தச் சமயத்தில் வறட்டுக் கௌரவம் பாராமல் முதல்வர் செயல்பட்டிருக்கும் விதம் பாராட்டுக்குரியது.

'கர்நாடகமும் மகாராஷ்டிரமும் ஆட்சேபணை தெரிவித்திருக்கிறதே, திட்டம் நிறைவேறுமா?' என்று கேட்டவர்கள், நிலைமையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அம்மாநிலங்களுக்கும் ஆந்திராவுக்கும் இடையேயான ஒப்பந்தம் 2000—ல் முடிவடையும் போது, அதிகப்படி கிருஷ்ணா நீரில் தங்களுக்குக் கிடைக்கக்கூடிய பங்கு கிடைக்காமல் போய் விடுமோ என்பதற்காகத்தான் அந்த மாநிலங்கள் இப்போதே ஓர் ஆட்சேபணையை எழுப்பி வைக்கின்றனவேயொழிய, இப்போது ஆந்திராவுக்குக் கிடைத்து வருகிற நீரில் சிறிதளவை அம்மாநிலம் தமிழகத் தலைநகருக்குக் கொடுப்பதில் அவர்களுக்கு ஆட்சேபணை இல்லை; இருக்கவும் முடியாது. நாளை ஒரு பிரச்னையை அவர்கள் காரணமின்றி எழுப்பக் கூடாது என்பதற்காகத்தான் அம்மாநில முதல்வர்களையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஆரம்ப விழாவில் பங்கேற்றார் இந்திரா காந்தி. எனவே, மத்திய அரசு சட்டாம்பிள்ளையாக இருந்து வந்தால் பிரச்னை இராது. அதுவே பொல்லாப் பிள்ளையாக மாறும் போதுதான் நாம் தாகத்தில் தவிக்க நேரிடும். அரசியல் காழ்ப்புணர்ச்சிகளை இதிலெல்லாம் காட்டி விட்டு, டில்லியில் ஒருமைப்பாடு பல்லவி பாடுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

**சூ**ளைமேடு அரசு பெண்கள் உயர்நிலைப் பள்ளியின் வெள்ளி விழாவில் பேசும் போது, 'இலவசங்கள் என்பது தாற்காலிகமாகத்தான் இருக்க முடியும்; அது என்றென்றும் நீடித்தால் சமுதாயத்துக்குத் தீங்குதான் ஏற்படும்; மெய்யான முன்னேற்றம் என்பது மக்கள், தாங்களே தங்களுக்குத் தேவையானவற்றை வாங்கிக் கொள்ளக்கூடிய முறையில் அவர்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதுதான்' என்று அர்த்தமுள்ள சொற்களைக் கூறியிருக்கிறார் முதல்வர். சொல்லைச் செயலாக்கும் நோக்கில் தமிழகத்தைத் தொழில்மயமாக்கி வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்க வழிவகுப்பார் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம்.

ராமச்சந்திரா மருத்துவக் கல்லூரியை அரசுடைமையாக்கி அதனை எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக் கழகமாக அறிவித்ததில் முதல்வரின் பெருந்தன்மையை மீண்டும் காண்கிறோம். தவறுகள் பல நடந்துதான் உள்ளன. அவற்றைத் திருத்தும் போது பழி வாங்குவது போன்ற உணர்வுகளுக்கு இடம் தராமல் நன்னயம் செய்திருக்கிறார்.

'அவதூறுகளை எழுதிய பத்திரிகைகள் மீது வழக்குத் தொடுத்திருக்கிறோம் என்பதால் நாங்கள் எங்களை விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர்களாகக் கருதுகிறோம் என்று நினைத்து விட வேண்டாம்; விமர்சனங்களை வரவேற்கவே செய்கிறோம்' என்று பத்திரிகையாளர் கூட்டத்தில் முதல்வர் பேசியிருப்பது அவர் மனம் பக்குவப்பட்டிருப்பதை உணர்த்துகிறது.

அரசியல்வாதி நிலையிலிருந்து அரசியல் ஞானி நிலைக்கு உயரத் தாம் முயற்சி செய்து கொண்டிருப்பதை முதல்வர் சொல்லாலும் செயலாலும் நிரூபித்து வருகிறார். சரிந்து விடாமல் முன்னேற வாழ்த்தும் போதே, 'இந்த மலைப் பாதையில் வழுக்குப் பாறைகள் மிகுதி' என்றும் எச்சரித்து வைக்கிறோம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# இராம ராஜ்யம்



அந்தக் கிராமத்திற்கு ரோடு வசதியில்லை; பள்ளிக் கூடமில்லை; ஆஸ்பத்திரியிருந்தும் டாக்டர்கள் வருவதில்லை.... இவற்றையெல்லாம் கண்டு கொள்ளாத அரசாங்கம், அந்த கிராமத்திற்கருகில் ஏவுகணை பறக்க விட்டுப் பரிசோதனை செய்யும் போது மட்டும் பரிசோதனை முடியும் வரை அந்த மக்கள் ஊரைக் காலி செய்து விட்டுப் பாதுகாப்பான இடத்திற்குச் செல்ல வேண்டும் என்று அறிவிக்கிறது!

அப்படிக் காலி செய்யும் போது அந்த மக்களுக்கு நஷ்ட ஈடாகக் கொடுக்கப் படும் பணத்தில் பாதிக்குப் பாதியை ஆளுங்கட்சியிலுள்ள அரசியல்வாதிகள் 'கமிஷன்'டிக்கிறார்கள். மனச்சாட்சியுள்ள அதிகாரிகள் அந்த ஊழலுக்கு உடன்பட மறுக்கும் போது, அதிகாரத்தைக் காட்டி மிரட்டியும் சலுகைகள் காட்டிச் சந்தோஷப்படுத்தியும் பணிய வைக்கிறார்கள்....

இப்படி அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் எப்படியெல்லாம் கைகோத்துக் கொண்டு சராசரி இந்திய கிராமங்களைச் சுரண்டிக் கொண்டிருக்கிறார்கள் என்பதிலிருந்து, கிராமங்களில் இயல்பாகவே உள்ள ஜாதிப்பிரச்னை, பொருளாதாரப் பிரச்னை மற்றும் குருட்டுத் தனமான மூட நம்பிக்கைகள்.... என்று கிராமங்களின் சகல சிக்கலான பரிமாணங்களையும் சேர்த்து மேடையேற்றியிருக்கிறார் கோமல்.



பெரும் பாலும் நடிகர்கள் அனைவருமே அந்தந்தப் பாத்திரங்களோடு ஒன்றிய நிலையில் இயல்பாக நடித்திருப்பது பாராட்டத் தக்கது.

''வேட்டி கட்டிக்கிட்டு இருக்கிறவன் கிட்டப் போய்ச் சிக்கனமாக் கோவணம் கட்டிக்கன்னு சொல்லலாம்; ஆனா, ஏற்கெனவே கோவணங்கட்டிக்கிட்டு இருக்கிறவன் கிட்டப்போய் எப்படிச் சிக்கனமா இருக்கச் சொல்றது? அது மாதிரிதான் இந்த ஜனங்களிடம் போய் போஸ்டாபிஸில் பணம் போடச் சொல்றதும்...''

''பாலுத் தேவரே, நீங்க மட்டும் ஊரைக் காலி பண்ணிட்டுப் போகலைன்னா, உங்க தோப்புல நாங்களே சாராய ஊறலைப் பொதச்சு வெச்சு, நீங்க கள்ளச் சாராயம் காய்ச்சினதாக் கேஸ் புக் பண்ணி ஏவுகணை ஏவி முடியறவரைக்கும் உங்களை உள்ள வெச்சிருக்க வேண்டியிருக்கும்.....''

— இப்படிப் பட்ட கூர்மையான வசனங்களைக் கொண்டு போலித்தனங்களை அங்கங்கே குத்திக் கிழிக்கும் கோமல், இறுதிக் காட்சியில் நாடகக் கதையோடு சிறிதும் ஒட்டாமல், நாடகத்தில் ஏவப்பட்ட ஏவுகணையை நாடக நாயகன் வலிய வந்து நியாயப்படுத்துமாறு செய்திருக்கிறார். 'அக்னி ஏவுகணையை எதிர்ப்பவர்கள் தேசத்துரோகிகள்' என்ற ராஜீவ் காந்தியின் தவறான தீர்ப்புக்குத் தலைவணங்கியதால் இணைக்கப்பட்ட காட்சியாக இது இராது என்றும் நாடக ஆசிரியரின் நம்பிக்கையைப் பிரதிபலிக்கும் வசனம் தான் என்றும் நம்மை நாமே சமாதானப் படுத்திக் கொள்ள வேண்டியதுதான்!

இருந்தாலும் கூடவே, 'ஏவுகணை ஒரு சாதனைதான் என்றாலும் அதன் மூலம் நமது பிரச்னைகள் தீர்ந்து விடவில்லை; நமது போராட்டம் இன்னும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது....'' என்று நாடக நாயகன் சொல்ல, உடனே கிராம மக்கள் அனைவரும் தேவர், ரெட்டியார், ஹரிஜன் என்ற தங்கள் ஜாதி வேற்றுமைகளைத் தூக்கியெறிந்து விட்டு, ஒருவரோடொருவர் கைகோத்துக் கொண்டு அடுத்த போராட்டத்திற்குத் தயாராகிறார்கள். நாடகத்தின் இந்த முடிவு நாட்டில் நடக்குமானால் அந்தப்போராட்டம், போராட்டங்களுக்கெல்லாம் முடிவு ஏற்படுத்தும் ஒரு போராட்டமாகத் திகழும்! ஆனால் அந்த (கி)ராம ராஜ்யம் இன்னும் வெகு தூரத்தில் அல்லவா இருக்கிறது!

— பிரின்ஸ்

# சொன்னது சொன்னபடி....



● ''வண்டி ஓட்டக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்னாலேயே நம் நாட்டில் டிரைவிங் லைசன்ஸ் வழங்கி விடுகிறார்கள். இது வெறும் டிரைவிங் லைசன்ஸ் மட்டுமல்ல. சாலையில் போகும் அப்பாவி மக்களைச் சாகடிக்கக் கொடுக்கப்படும் லைசன்ஸ். இதற்குக் காரணம், லைசன்ஸ் வழங்குவதில் உள்ள ஊழலும் முறைகேடுகளும்தான்.''

— ஆளுனர் அலெக்சாண்டர்.

● ''இங்கே பேசிய எல்லாருமே — துணை வேந்தர் டாக்டர் லலிதா காமேசுவரன் உட்பட — 'மருத்துவப் பல்கலைக் கழகம்' என்று மட்டுமே குறிப்பிட்டார்கள். 'டாக்டர். எம். ஜி. ஆர். மருத்துவப் பல்கலைக் கழகம்' என்று சொன்னால், எங்கே எனக்குப் பிடிக்காமல் போய்க் கோபித்துக் கொண்டு விடுவேனோ என்று நீங்கள் தவறாக நினைக்க வேண்டாம்.

— முதல்வர் கருணாநிதி.

● ''இலங்கைப் பிரச்னையில் நான் சொன்ன கருத்து, தேச விரோதமானது என்று தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் ராமமூர்த்தி சொன்னதை மட்டும் ஒளிபரப்பினார்கள். ஆனால் அப்படிக் குற்றம் சாட்டுவதற்கு முன்னால், உண்மையில் நான் என்ன சொன்னேன் என்று என்னிடம் கேட்டிருக்க வேண்டாமா?''

— முதல்வர் கருணாநிதி.

● ''தொலைக்காட்சி — வானொலி நிலையங்களுக்கு எதிரான எதிர்க்கட்சிகள் ஆர்ப்பாட்டம் அர்த்தமற்றது; அநாவசியமானது. அரசியல் நோக்கம் கொண்டது. தமிழ்நாடு முதல்வர் கருணாநிதியாகட்டும்; கேரள முதலமைச்சர் நாயனாராகட்டும், கர்நாடக முன்னாள் முதல்வர் ஹெக்டே ஆகட்டும்— பிரசார சாதனங்களைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தயங்கியதே இல்லை. தன்னுடைய இமேஜைப் பரப்பவும், மத்திய அரசைத் தாக்கவும் 35 கோடி ரூபாய்க்குத் துண்டுப் பிரசுரங்கள் அச்சடித்திருக்கிறார் ஹெக்டே. நாயனார் விநியோகித்த துண்டுப் பிரசுரங்கள் மார்க்ஸிய பிரசாரங்கள். தமிழ்நாடு அரசின் 'தமிழரசு' வெளியீடு 'கருணாநிதி முரசா'கத்தான் இருக்கிறது. மத்திய அரசின் பணிகளைப் பற்றி அதில் எதுவுமே இல்லை. ''தமிழ்நாடு அரசின் செய்திப் பிரிவு, கருணாநிதியை முக்கியமாக வைத்துத்தான் படம் தயாரித்திருக்கிறது... 'தினமலர்', அரசுக்குப் பிடிக்காத பத்திரிகை என்பதால் அதற்கு விளம்பரங்களை நிறுத்தி விட்டது. 'முரசொலி'க்கும் 'தினகரனு'க்கும் எவ்வளவு விளம்பரங்கள் கொடுத்திருக்கிறார்கள் என்று கணக்குச் சொல்லட்டுமே!''

— மத்திய செய்தி, ஒலிபரப்பு அமைச்சர் கிருஷ்ணகுமார்.

● ''மத்திய அமைச்சர் கிருஷ்ணகுமார் பேசுவது உண்மைக்குப் புறம்பானது. அவர் பேசிய அன்றே, 'தினமல'ரில் அரசு விளம்பரம் ஒன்று வெளியாகி இருக்கிறது! 'முரசொலி', 'தினகரனு'க்கு விளம்பரங்கள் கொடுத்தது பற்றிச் சொல்லும் போது, மற்ற பத்திரிகைகளுக்கும் அரசு கொடுத்திருக்கும் விளம்பரங்களை மொத்தமாகப் பார்க்க வேண்டும். 'தமிழரசு' இதழில் அரசின் சாதனைகளைத்தான் எழுதியிருக்கிறோமே தவிர, கட்சி பற்றிக் குறிப்பிடவில்லை. ஆனால் வானொலியும், தொலைக்காட்சியும் பிரதமர் விஷயத்தில் அப்படியா நடந்து கொள்ளுகின்றன?

— அமைச்சர் பொன். முத்துராமலிங்கம்

தொகுப்பு: சித்தார்த்

---

வீட்டுக்காரி: ''ஏன்யா, ராப்பிச்சை! உனக்கு இலவச அரிசி தர்றாங்களா...?''

ராப்பிச்சை: ''அதெல்லாம் மாச வருமானம் 300—க்குக் கீழே இருக்கிறவங்களுக்குத்தானாம்... தாயி!''

— எஸ். ஷெந்தில்.

பாலகுமாரன் எழுதும்

# இரண்டாவது சூரியன்






"என்னங்க, எதிர்த்த வீட்டு மாடியில் இருக்கற பையன் நம்ம பொண்ணையே ஜன்னல் வழியாப் பார்க்கிறான்.'' என்று என் மனைவி கவலையுடன் சொல்லவும் நானும் முதலில் அதிர்ந்துதான் போனேன்.

மனத்தில் சட்டென்று எதிர்வீட்டுப் பையன் மேல் கோபம் கொப்புளித்தாலும், இதை நிதானமாகக் கையாள வேண்டும் என்று என் அறிவு உணர்த்தியது.

# வீட்டு ஜன்னல்

**கிருஷ்ணா**

''கவலைப்படாதே பானு. இதை நான் பார்த்துக்கறேன். இன்னும் பத்து நாளைக் குள் இந்தப் பிரச்னையைச் சுமுகமா முடிச் சுடறேன்'' என்று என் மனைவிக்கு ஆறுதல் சொன்னேன்.

முதலில் அந்தப் பையனைப் பற்றி விசா ரித்தேன்.

பி.காம் படித்துக் கொண்டிருக்கிறான். இரண்டு அக்கா, ஒரு தங்கை. அப்பா போஸ்ட் ஆபீஸ் கிளார்க். இவன் படித்து முடித்து நல்ல வேலையில் சேர்ந்தால்தான் பொருளாதாரத்தில் அந்தக் குடும்பம் நிமிர முடியும் என்று அறிந்து கொண்டேன்.

இந்தப் பத்தொன்பது, இருபது வயது விவரம் அறியாப் பருவத்து ஆசைகளைக் கடந்து வந்தவன் தானே நானும்.

யாராவது ஒரு பெண் எதிர் வீட்டிலிருக் கிறாள் என்றாலே மனம் சிறகடித்துப் பறக் கும். அதுவும் அவள் தன்னைக் கவனிக் கிறாள் என்றும் தெரிந்துவிட்டால் அவ் வளவு தான், உலகத்தில் எல்லாமே, எல் லோருமே இரண்டாம் பட்சமாகிவிடும்.

பெண்ணின் மனமும் அதேதான். பைய னென்றால் தன்னைத் தைரியமாக வெளிக் காட்டுவான். பெண்ணோ, பிறர் அறியாத படி, ஆனால் அவன் மட்டும் உணரும்படி ஜாடை காட்டி முகம் சிவப்பாள்!

இரண்டு நாள் கழித்து அவன் படிக் கும் கல்லூரி அருகிலுள்ள பஸ்ஸ்டாப்பில் ஸ்கூட்டருடன் காத்திருந்தேன்.

அவன் வெளியே வரும் போது யதேச் சையாக அவனைப் பார்ப்பது போல் பாசாங்கு செய்தேன்.

''தம்பி, நீ நம்ம தெருவுலதானே குடி யிருக்கே?''

''ஆமாம் சார்,'' என்றான் சற்றுக் கல வரத்துடன்.

குற்றமுள்ள அவன் நெஞ்சின் பயம் என்னுள் சிரிப்பை வரவழைத்தது.

''நான் வீட்டுக்குத்தான் போறேன் தம்பி. பின்னாடி ஏறிக்கயேன்.''

''பரவாயில்லை சார். நான் பஸ்லேயே வரேன்,'' என்றான் தயக்கமாய்.

''அட வாப்பா! நானா சுமக்கப் போறேன் உன்னை. ஸ்கூட்டர்தானே! உட் கார்'' என்று வற்புறுத்தவும் ஏறிக் கொண் டான்.

முன்பே நான் அறிந்திருந்த அவன் படிப்பு, குடும்ப விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

கொஞ்சம் சகஜ நிலைக்கு வந்தான்.

அதற்கு அடுத்த நாள், அவன் காலேஜ் லெக்சரர் ஒருவரைப் பற்றித் தெரிந்து கொள் ளும் சாக்கில் அவன் வீட்டுக்குள் நுழைந் தேன்.

அவன் அப்பாவுடன் இதுவரை 'ஹலோ' மட்டும் சொல்லிக்கொண்டிருந்த நான் அன்று அரைமணி நேரம் பேசினேன்.

மீண்டும் இரண்டுநாள் கழித்து 'அந்த லெக்சரரைப் பற்றி விசாரித்தாயா?' என்று கேட்பதற்காக அந்தப் பையனை என் வீட் டிற்குக் கூப்பிட்டனுப்பினேன்.

''வாப்பா சேகர், படிப்பெல்லாம் எப் படிப் போயிட்டிருக்கு? என்ன சாப்பிடற இப்ப?'' என்று உபசரித்தேன்.

''பானு, தம்பிக்கு, புவனாவிடம் காப்பி கொடுத்தனுப்பு!'' என்று உட்புறம் குரல் கொடுத்தேன்.

''தம்பி, இவதான் என் பொண்ணு புவனா. நீ பார்த்திருக்கமாட்டேன்னு நினைக் கறேன். ஏன்னா, நீதான் குனிஞ்சதலை நிமிராம, நீ உண்டு, உன் வேலை உண் டுன்னு இருக்கறவனாச்சே. இவ ப்ளஸ்டூ படிக்கிறா....'' என்று அறிமுகப் படுத்திய படியே அவன் மனச்சாட்சியைக் குத்தி னேன்.

சங்கடத்துடன் நெளிந்தான்.

''புவனா, தம்பி எதிர் வீட்டுல இருக் கான். பேரு சேகர். பி.காம். செகண்ட் இயர். ரொம்பக் குடும்பப் பொறுப்புள்ள பையன். படிச்சு, முடிச்சு இவனுக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சாத்தான் இவனோட அக்கா, தங்கை கல்யாணம் எல்லாம் நல்ல படியா நடக்கமுடியும்னு இவன் அப்பா நேத்து என்கிட்டே ரொம்ப நம்பிக்கையா சொல்லிக்கிட்டு இருந்தார். இவனை நீ அண்ணனா நினைச்சுக்கலாம். இனிமே நம்ப வீட்டுப் புள்ளை சேகர்,'' என்று நான் சொன்னவுடன் தரையில் கண்களை ஓட்டி யபடி தாவணி முந்தானையைத் திருகினாள்.

''காப்பி தம்ளரை எடுத்துக்கிட்டுப் போம்மா,'' என்றுசொல்லி அவளை உள்ளே அனுப்பினேன்.

அப்போது என் மனைவி அங்குவந்து என்னையும், சேகரையும் குழப்பத்துடன் மாறி மாறிப் பார்த்தாள்.

''தம்பி, இவதான் என் மனைவி,'' என்று சொல்லிவிட்டு, ''பானு, தம்பி தங்கமான பையன். நமக்குப் பிள்ளையில்லாத குறை யை இனிமே இவன்தான் தீர்க்கப் போறான்'' என்றேன் மனைவியிடம்.

''அப்படியா, ரொம்ப சந்தோஷம்'' என் றாள் குழப்பம் விலகாமல்.

''இந்தக் காலத்துப் பசங்க மாதிரி காதல், கீதல்னு சொல்லிக்கிட்டுப் பொண்ணுங்க பின்னாடி சுத்தறதுன்னு இல்லாம, தான் உண்டு, தன் படிப்பு உண்டுன்னு இருக் கறவன் இந்தப் பையன். குடும்பக்கஷ்டம் உணர்ந்தவன்'' என்று சேகர் விடை பெற்றுச் செல்லும் போது அவன் காதில் விழும்படியாக என் மனைவியிடம் சொன் னேன்.

இப்போதெல்லாம் எதிர்வீட்டு மாடி ஜன்னல் மூடியே கிடக்கிறது.

# சிங்கப்பூரில் ஒரு வாரம்

சுஜாதா

சாங்கி விமான நிலையத்திலிருந்தே சிங்கப்பூரின் நவீனம் திகைக்க வைக்கிறது. ஏர்போர்ட்டில் சந்திக்க வந்த ஷிவ் பானர்ஜி குப்பை போட்டால் ஐந்நூறு டாலர் அபராதம் என்று சொல்ல, அந்தக் காகிதத் துண்டை மீண்டும் பொறுக்கிப் பைக்குள் போட்டுக் கொண்டேன். காரில் எக்ஸ்பிரஸ்வேயில் விரையும் போது பானர்ஜி குறைப்பட்டுக் கொண்டார்: ''இங்கே இந்தியர்கள் என்றால் தமிழர்கள் என்றுதான் அர்த்தம். என் இந்தியப் பெயரைப் பார்த்து அரசாங்கம் இன்கம்டாக்ஸ் பாரம்களைத் தமிழில் அனுப்புகிறது.''

'லிட்டில் இண்டியா' என்று சொல்லப்படும் செரங்கூன் ரோடில்தான் கொஞ்சம் குப்பையாக, அழுக்காக இருக்கிறது. மற்றெல்லாம் பத்து செகண்டுக்கு முன்னால் தான் அலம்பினாற் போன்ற சுத்தம். டாக்ஸியில் கிராஃபிக் ஈக்வலைஸர்கள். சீனத்துப் பாட்டு கூட பாப் மெட்டில். தமிழ் ஒலிபரப்பில் கலாசாரம் மாறாமல் சீர்காழி கோவிந்தராஜனையும் சூலமங்கலம் சகோதரிகளையும் எஃப் எம்மில் தருகிறார்கள். டாக்ஸிகள் நிஸ்ஸான் டோயோட்டா புதிதுடன் எங்கு கூப்பிட்டாலும் வருகிறார்கள். மீட்டருக்கு மேல் கேட்பதற்கு ஒழுங்கான விதிமுறைகள் உள்ளன.

வான் விரும்பும் கட்டடங்கள் நடுவே பழைய காலத்துக் கட்டடங்களையும் போற்றிப் பாதுகாக்கும் ஆசை. பசுமை. அறிவிப்பில்லாமல் வரப் போகும் மழை. வேலைக்குக் கூப்பிடும் வாக் — இன் இண்டர்வியூக்கள். ஆர்ச்சர்டு ரோடின் ஆடம்பரம். கிழக்கும் மேற்கும் சிறப்பாக இணைந்த நகரம்.

இருபத்தாறு லட்சம் ஜனத்தொகையில் இருபது லட்சம் சீனர்கள் இருப்பினும் தேசிய கீதம் மலாய் மொழியில் இருக்கிறது! ஒண்ணரை லட்சம்தான் தமிழர்கள் இருந்தாலும், டாலர் நோட்டில் தமிழ்... இதற்கு ஆதார காரணம் சிங்கப்பூரின் சரித்திரத்தில் இருக்கிறது என்று வி. டி. அரசு சொன்னார். அரசு சிங்கப்பூர் முரசு பத்திரிகையின் ஆசிரியர். அரசாங்கச் செய்தித் துறையில் உயர் அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். இரண்டாம் உலகப் போரிலிருந்து நேற்று வரை சிங்கப்பூரில் நிகழ்ந்த சரித்திர நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் படங்களுடன் அழகான புத்தகமாகப் பதிப்பித்திருக்கிறார்., சிங்கப்பூருக்குப் பதினான்காம் நூற்றாண்டிலிருந்தே சரித்திரம் இருந்தாலும் பிரிட்டிஷ்காரர்கள் சைனாவுடன் வியாபாரம் செய்யப் பாதி வழியில் ஒரு துறைமுகம் தேவைப்பட்டு 1819— இல் ஹேஸ்டிங்ஸ் பிரபு காலத்தில் ராஃபிள்ஸ் என்பவர் லோக்கல் ராஜாவிடமிருந்து ஒப்பந்தம் பெற்றுத் துறைமுகம் நிறுவிய பின்தான் அது ஸ்திரப்பட்டது. வியாபாரம் முதல் வருஷமே பெருக, டச்சுக்காரர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு சுல்தானுக்குப் பென்ஷன் கொடுத்து, தக்க வைத்துக் கொண்டு விட்டார்கள். பெனாங்கு மலாக்காவுடன் செட்டில்மெண்டாக இருந்து, இந்திய கவர்னர் ஜெனரலுக்குக் கீழ் வந்து பிரிட்டிஷ் காலனியாக மாறி, ஜப்பானியர்களால் '42 — இல் ஆக்கிரமிக்கப்பட்டு, '45 — இல் மீட்கப் பெற்று, கிரவுன் காலனி, மலேசியாவுடன் இணைப்பு, பிரிவு, 1965 — இல் தனி நாடு. இவ்வாறு முழுமை பெற்ற இந்த தேசத்தில் மலாய்க்காரர்கள்தான் உள்ளூர்க்காரர்கள். அவர்கள் நாட்டில் நாம் வாழ்கிறோம் என்று பெரிய மனுஷத் தன்மையுடன் மலாய்க்காரர்களுக்குச் சலுகைகள் கொடுத்திருக்கிறார்கள். தேசிய கானம் மற்றும்





• இப்படிப்பட்ட காட்சிகளும் சிங்கப்பூரில் உண்டு...

இலவசப் படிப்பு. தமிழர்கள் ஆதிகாலத்திலிருந்து ரப்பர்த் தோட்டங்களிலும் துறைமுகத்திலும் உழைக்க வந்தவர்கள். இந்திய சுதந்திரத்துக்குப் பின் பலர் நாடு திரும்பிவிட, எண்ணிக்கை குறைந்து விட்டாலும் தமிழுக்கு மதிப்புத் தந்திருப்பது இன ஒருமைப்பாடு கருதியே. ஆசிரியர்கள், வக்கீல்கள், டாக்டர்கள் பலர் தமிழர்களாம். இந்த ஒருமைப்பாட்டு விருப்பம் சற்று அழுத்தமாகவே சொல்லப்படுகிறது. கலவரங்களை அவர்கள் கொஞ்சம் சாம்பிள் பார்த்து விட்டதால் அவற்றைத் தவிர்க்க மிகவும் பிடிவாதமாக இருக்கிறார்கள். டெலிவிஷன் நான்கு மொழிகளும் பேசுகிறது. (தமிழ் நாடகத்தில் டி. எம். எஸ். இசைத் தட்டுக்கு வாயசைக்கும் கதாநாயகன்) நான் சென்ற போது ஒருமைப்பாட்டு தினம். தமிழர்களும் சீனர்களும், மலாயர்களும் கைகோத்துக் கொண்டு ஸ்ட்ரெய்ட்ஸ் டைம்ஸில் போட்டோ எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

சிங்கப்பூரில் சுபிட்சம் இருக்கும் வரை, எல்லோருக்கும் வாய்ப்பு இருக்கும் வரை,



● அழகுக்காக மட்டும் ஒரு பெண்ணை மணப்பவன் அடித்திருக்கும் பெயிண்ட்டுக்காக மட்டும் ஒரு வீட்டை வாங்குபவன்.

— ஆப்பிரிக்கப் பழமொழி.

● பணம் இல்லாவிட்டால் உன்னை யாருக்கும் தெரியாது. பணம் இருந்து விட்டால் உன்னை உனக்கே தெரியாது.

— ஸ்பெயின் பழமொழி.

— மதிவண்ணன்

கலவரங்கள் வராது என்றுதான் தோன்றுகிறது. இருந்தாலும் ஒருவிதமான பதற்றம், அதைப் பற்றிய கவலை இருப்பதை உணர முடிகிறது.

சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர்களைச் சந்திக்கும் சந்தர்ப்பத்தை அரசு ஏற்படுத்திக் கொடுத்தார். டீ. வி. யிலிருந்து வந்த பத்மனாபன், தமிழ் அறிவிப்பாளர். "ஸாரி, நான் உங்க கதை ஏதும் படிச்சதில்லை" என்றார். (இம்மாதிரி ஒரு 'ஸாரி'யை எப்படித் தவறாமல் எல்லாக் கூட்டங்களிலும் சந்திக்கிறேன்.) பத்மநாபன் டீ. வி. யில் தமிழ்ச் செய்தி வாசிப்பது வசீகரமாக இருந்தாலும், 'சீற்றம்' 'இளஞ்சிறார்' போன்ற வார்த்தைகளைத் தவிர்க்கலாம் என்று சொன்னதும் கவிஞர்கள் கோபப்பட்டு, 'ஸாரி, சீற்றப்பட்டு எங்கள் தூய தமிழைக் குறை சொல்லாதீர்கள்! இப்படியே இருந்து விட்டுப் போகட்டும்' என்றனர். கவிஞர் உலகநாதன், "புதுக்கவிதையை ரசிக்கலாம். ஆனால் அதைக் கவிதை என்று சொல்ல வேண்டாம்!" என்றார்.

எழுத்தாளர்களின் சுபாவத்தில் பொதுவாகவே ஒரு தீவுத் தன்மை இருப்பதை, சிங்கப்பூரில் எதையாவது குறை சொல்ல முயன்றால் உடனே அதை நியாயப்படுத்தும் ஆர்வத்தைக் கண்டேன்.

'டு டே இன் பார்லிமெண்ட்' என்று மக்கள் அவையின் விவாதங்களை டெலிவிஷனில் காட்டுகிறார்கள். முதலில் அதை ஏதோ டீ. வி. சீரியல் என்று நினைத்து விட்டேன். அப்படி ஒழுங்காக நேர்த்தியான ஆங்கிலத்தில் "ஸ்பீக்கர் ஸார்" என்று மரியாதையோடு தனபாலன் பேச, எதிர்ப்பவர்கள் கூட, ரொம்ப நாசூக்காக வலிக்காமல் பேசினார்கள். செருப்பு வீசி முந்தானை இழுக்கப்படும் நம்மூர் சட்டசபைகளுக்குப் பழகிய எனக்கு இது என்ன சொர்க்க லோக பார்லிமெண்டா என்று வியப்பாக இருந்தது. பிற்பாடுதான் காரணம் புரிந்தது! மொத்தம் (எழுபத்தேழா?) அங்கத்தினர்களில் ஒருவர் தவிர மற்ற எல்லோரும் ஆளுங்கட்சியான 'பீப்பிள்ஸ் ஆக்ஷன் பார்ட்டியினர். எதிர்க்கட்சி ஒருவர் மட்டுமே! அவரும் ஆஸ்பத்திரியில் இருக்கிறாராம்!

சிங்கப்பூரின் சுபிட்சத்துக்கு மற்றொரு காரணம் இலேசான சிநேகமான சர்வாதிகாரம் என்று தோன்றியது. அத்தனை சுத்தம் இருந்தும் கம்ப்யூட்டர்களும் ஹைடெக்கும் பிரம்படி தண்டனையும் ஒன்றி வாழும் வசீகர நகரம். நான் போயிருந்த போதுதான் விசா தீர்ந்து அதிக நாட்கள் தங்கிய இந்தியர்களை நாடு கடத்தும் முன், ஆளுக்குப் பத்துப் பிரம்படி கொடுத்து அனுப்பினார்கள். வலிக்குமாம்.

இருந்தும் இருபத்தைந்து லட்ச ஜனத்தொகைக்கு வருஷம் நாற்பது லட்சம் டூரிஸ்டுகள் வருகிறார்கள். உலகிலேயே உயரமான ஓட்டல் இங்கேதானாம். வெஸ்டின் ஸ்டாம்ஃபோர்டு. 73 மாடி. 226 மீட்டர். 1253 ரூம். நம்மூர்க்காரர்கள் பெரும்பாலும் செரங்கூன் ரோடு பக்கம் தான் தங்குகிறார்கள். இங்கேதான் இட்லி சாம்பார் சாப்பாடு எல்லாம் கிடைக்கிறதால்.

காலையிலிருந்து இரவு வரை சகட்டு மேனிக்கு வாங்கித் தள்ளுகிறார்கள். வாங்கிக் கால் ஓய்ந்த போது, விலையை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள வருபவர்களை ப்ரெஸிடெண்ட் மெர்லின் ஓட்டலில் நிறையப் பார்க்கலாம். அந்த ஓட்டலில் நடக்கும் மற்றொரு வியாபாரத்தைப் பற்றிக் கவலையே இல்லாமல் மாமிகளும் பாட்டிகளும் சேட்டுகளும் குண்டான பெண்களும் ஊடாடுகிறார்கள். எல்லாரிடமும் ஒரு ரைஸ் குக்கர் அல்லது டின்னர் செட். அல்லது காஸியோ சமாசாரம். தங்கம் விற்கும் சைனாக்காரன் கடையில் எல்லோரும் மொய்க்கிறார்கள். ஊர் சுற்றிப் பார்ப்பதும் சாப்பிடுவதும் இரண்டாம் பட்சம்தான்.

ஜே. எம். சாலி எஸ் பி ஸி (சிங்கப்பூர் ப்ராட்காஸ்டிங் கார்ப்பரேஷனில்) செய்தி அறையைக் காட்டினார். கம்ப்யூட்டர்களைத் திறமையாகப் பயன்படுத்துகிறார்கள். தமிழ்ச் செய்தி கூட கம்ப்யூட்டரில்தான் அடிக்கிறார்கள். கார்ப்பரேஷனின் மௌனமான படிகளுக்கருகில் உட்கார வைத்து, பன்னீர் செல்வம் ஒரு திடீர்ப் பேட்டி எடுத்தார். சுநா சு பற்றியும் கணிப்பொறி பற்றியும் புதுக்கவிதைப் புத்தக மதிப்புரை பற்றியும் சுவாரஸ்யமான கேள்விகள் கேட்டார். ஞாயிற்றுக்கிழமை ஒளிபரப்பானது. கேட்டீர்களோ?

சிங்கப்பூர் ஏர்லைன்ஸின் விமானத்தின் ஹெட்செட்டில் என். ரமணியும், பாலமுரளியும், இளையராஜாவும் ஒலிக்க, 'இறால், இறைச்சி என்று மெனு கார்டில் தமிழ் எழுதியிருக்க, மிக மென்மையான சீனத்து ஏர்ஹோஸ்டஸ்ஸின் வேஷ்டி போல உடை விலகும் போது பளிச்சிடும் கால்கள் நினைவில் தேங்க, சன்னலுக்கு வெளியே மரகதத் தீவு மறைய, மாஜூலா, சிங்கபூரா.

# ஃபைப்ரோஃபிளெக்ஸ்

## சுகமான நித்திரைக்கு தரமான மெத்தை




adsindia






ISI அளிப்பது ஃபைப்ரோஃபிளெக்ஸ் தரத்திற்கு முத்திரை
ஃபைப்ரோஃபிளெக்ஸ் அளிப்பதோ சுகமான நித்திரை

Manufacturers :



**BHARAT MOTORS**

151, Mount Road, Madras-600 002 Phone : 865512, 861923
Grams : FIBROFLEX - Telex : 041-6136 BM IN
Branch : 37, Greams Road, Madras-600 006. Phone : 863250, 471626
Factory : Industrial Estate, Pettai, Tirunelveli-627 010. Phone : 23622 25932

# மாப்பிள்ளை?

ராஜ்கோகுல்

"முதல்லே மாப்பிள்ளைக்குக் கொடும்மா காப்பியை...." யாரோ சொன்னார்கள்.

'இவரா...? இவரா மாப்பிள்ளை...?' பூங்கோதை திடுக்கிட்டாள்.

அதே விநாடியில், பெண் பார்க்க வந்த மாப்பிள்ளையான ராஜனும் முணுமுணுத்துக் கொண்டான். அதே பூங்கோதைதான்...!'

இருவரும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள். ஒருவருக்கொருவர் நன்கு அறிமுகமானவர்கள்.

காப்பியைக் கொடுத்த அடுத்த விநாடியே, அங்கே நிற்க முடியாமல் அறைக்குள் வந்து புகுந்து கொண்ட பூங்கோதைக்கு நெஞ்சு படபடத்தது. உடல் முழுவதும் 'தடதட'வென நடுங்க, நெற்றியில் வியர்வைத் துளிகளும் கண்களில் கண்ணீர்த் துளிகளும் ஒரே சமயத்தில் பொங்கின.

'ராஜன்! இந்த ராஜனுக்குத்தான் என்னைப் பற்றிய எல்லா விவரமும் தெரியுமே! நானும், சங்கரும் காதலித்ததையும், கைகோத்துக் கொண்டு கல்லூரி முழுவதையும் சுற்றிச் சுற்றி வந்ததையும், இவர் பார்த்துக் கொண்டு இருந்தவர்தானே! அதிலும் சங்கர் என்றாலே இவருக்கு ஆகாதே! கடும்பகையாயிற்றே? இவரா இந்தத் திருமணத்திற்குச் சம்மதிக்கப் போகிறார்? கடவுளே! ஏன் இப்படி என்னை அவமானப்படுத்துகிறாய்...?' – பூங்கோதை மனத்திற்குள் புலம்பினாள்.

இதுவரை அவளை நான்கு மாப்பிள்ளைகள் வந்து பார்த்து விட்டுப் போய் விட்டார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லித் தட்டிக் கழித்து விட்டார்கள். ஐந்தாவது தடவையாவது பிரச்னைக்கு ஒரு முற்றுப் புள்ளி விழும் என்று எதிர்பார்த்த பூங்கோதையின் முன் மீண்டும் ஒரு பெரிய கேள்விக்குறி தான் விழுந்தது.

பூங்கோதை கட்டிலில் குப்புறப் படுத்து, தலையணைக்குள் விம்மினாள். அவள் மனத்தில் கல்லூரிக் கால நினைவுகள் எல்லாம் கரம் கோத்துப் பவனி வர ஆரம்பித்தன.

மூன்றாமாண்டு பி. ஏ. படிக்கும் போதுதான் சங்கருக்கும் அவளுக்கும் இடையே நட்பு நெருக்கமாகியது. சங்கரின் கலகலப்பான பேச்சு, மிடுக்கான நடையுடை, எந்தப் பிரச்னையானாலும் முதல் ஆளாக நிற்கும் அவனது துணிவு... எல்லாமே பூங்கோதையை அவன் பால் ஈர்த்து விட்டன. சங்கர் ஒரு நல்ல விளையாட்டு வீரனும் கூட. விழா மேடையில் பரிசுபெற அவன் அழைக்கப்படும் போது, கைதட்ட ஆரம்பிக்கும் முதல் ஆள் பூங்கோதையாகத்தான் இருக்கும். கைகள் வலிக்க வலிக்கத் தட்டுவாள்.

கொஞ்ச நாளிலேயே இவர்களது காதல் கல்லூரி முழுவதும் விளம்பரமாகிப் போனது.

ராஜன் பிசிக்ஸ் மாணவன். அவனும் ஒரு விளையாட்டு வீரன் என்கிற வகையில் முதலில் அவனுக்கும், சங்கருக்கும் ஏற்பட்ட போட்டிதான் பகையாக வளர்ந்துவிட்டது. கல்லூரியில் மாணவர் பேரவைத் தலைவருக்கான தேர்தல் வந்தபோது பகை முற்றியது. இருவரும் போட்டியிட்டார்கள்.

இருவருக்கும் கடும் போட்டி. முடிவில் சங்கர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட, ராஜன் தோல்வியைத் தழுவினான். அதற்குப் பின் ஒரு சமயம் சங்கர் கோஷ்டியைச் சேர்ந்த மாணவர்கள், ஒரு ஸ்ட்ரைக் ஏற்பாடு செய்த போது, ராஜன் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் ஸ்ட்ரைக் செய்யக் கூடாது என்று எதிர்க்க, கடைசியில் அடிதடியில் போய் முடிந்து, போலீஸ் வந்து ராஜனைக் கைது செய்து... பெரிய ரகளையாகி விட்டது!

படிப்பு முடிந்து சர்ட்டிபிகேட் வாங்கக் கல்லூரிக்குச் சென்ற போது அவளைச் சந்தித்த சங்கர் ஒரு பெண் பிள்ளையைப்



# தெய்வப் பணியோடு சமூகப் பணி

''வாரவழிபாட்டுச் சங்கம்'' என்று ஊருக்கு ஊர் இருக்க வேண்டும் என்று நான் ஓயாமல் சொல்லி வருவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வாரத்தில் ஒருநாள் ஜனங்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கோயிலில் வழிபாடு நடத்த வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இவர்களே பரோபகார ஜீவாத்ம கைங்கர்யப் பணிகளையும் எடுத்து நடத்த வேண்டும். தனி ஆர்கனைசேஷன் எதுவும் வேண்டாம். ''வாரத்தில் ஒருநாள்தானே லீவு இருக்கிறது?'' என்று கேட்பீர்கள். அந்த ஒருநாளிலேயேதான் இரண்டையும் சேர்த்துச் செய்யச் சொல்கிறேன். தெய்வப் பணி, ஸமூஹப் பணி இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஞாயிற்றுக் கிழமை தோறும் செய்ய வேண்டும்.

முதலில் கோவில் வாசலில் எல்லா ஜனங்களும் சேர்ந்து வழிபட்டு, அத்தனை பேரும் அந்த ஒரே பராசக்தியின் குழந்தைகளாகச் சேர்ந்து பகவந் நாமத்துடனேயே கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு போய்க் குளம் வெட்டுவதையோ, ரோடு போடுவதையோ, நந்தவனம் வளர்ப்பதையோ செய்ய வேண்டும். வேலையெல்லாம் முடிந்த பின்னும் கோவிலுக்கே திரும்பி வந்து, ''உன் க்ருபையால் இன்றைக்குக் கொஞ்சம் பாபத்தைக் கழுவிக் கொள்ள முடிந்தது. சரீரம் எடுத்ததற்குப் பயனாக ஓர் உபகாரம் பண்ண முடிந்தது'' என்று நமஸ்காரம் செய்ய வேண்டும். கொஞ்சம் பஜனை — ஒரு பத்து நிமிஷம் இருந்தால் கூடப் போதும் — கொஞ்சம் உபந்யாசம் நடத்தி விட்டு எல்லாரும் கலைய வேண்டும். அறுபத்து மூவர் அல்லது ஆழ்வாராதிகள் அல்லது பக்த விஜயத்தில் வரும் மஹான்கள் இவர்களைப் பற்றிய உபந்நியாசமாக இருந்தால், நம் மாதிரி மனிதர்களாக இருந்தவர்களே எப்படியெல்லாம் த்யாகத்தாலும் பிரேமையாலும் தெய்வமாக உயர்ந்திருக்கிறார்கள் என்று மனஸில் ஆழப் பதியும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

போல அழ ஆரம்பித்து விட்டான். ''என்னை மன்னிச்சுடு கோதை. 'கால் ஊனமான' எனது தங்கச்சியைக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதற்காக நான் என்னையே பணயம் வைக்க வேண்டியிருக்கு. நான் உன்னை நம்ப வைச்சு ஏமாத்திட்டேன் கோதை... என்னை மன்னிச்சுடு...''

பூங்கோதை அதிர்ச்சியடைந்தாள். ஆனால் அழவில்லை!

''சங்கர்! ஏன் இப்படி அழறீங்க? இப்ப என்ன நடந்துடுச்சு? நாம விரும்பினோம். பழகினோம். தப்பா ஒண்ணும் பண்ணிடலையே! எனக்கு எப்படியாவது கல்யாணமாயிடும். ஆனால் உங்க தங்கைக்கு ஆகிறது தான் ரொம்ப முக்கியம். டேக் இட் ஈஸி...'' — உள்ளே கிடந்த துக்கத்தையெல்லாம், உள்ளேயே அமுத்திக் கொண்டு, வெளியே சிரித்துக் கொண்டே சங்கருக்கு விடை கொடுத்து அனுப்பினாள்.

இப்போது அழுகிறாள்!

''ஏய்! கோதை? இவ்வளவு நேரமா இங்கே என்ன பண்றே? அவங்க எல்லோரும் போயாச்சு... எழுந்திரு...'' — அம்மாவின் குரல் கேட்டு, கண்களைத் துடைத்துக் கொண்டு அவசரமாக எழுந்து உட்கார்ந்தாள்.

''என்ன கோதை இது அழுத மாதிரி இருக்கு? எல்லாம் சந்தோஷமா முடிஞ்சிருக்கும்மா. மாப்பிள்ளைக்கு உன்னை ரொம்பப் பிடிச்சிருக்கு. அவங்க வீட்டாருக்கும் முழுச் சம்மதம். நேருக்கு நேராப் பளிச்சுன்னு முடிவைச் சொல்லிட்டாங்க. கையோட பஞ்சாங்கத்தைப் புரட்டி, முகூர்த்த நாளும் குறிச்சிட்டோம்...'' — அம்மா சொல்லச் சொல்லப் பூங்கோதைக்கு ஆச்சரியமும், மகிழ்ச்சியும் தாங்க முடியவில்லை!

''ரொம்ப நல்ல குடும்பமா இருக்கு கோதை. கல்யாணத்துக்குப் பிறகு தொடர்ந்து வேலைக்குப் போறதும், போகாததும் பெண்ணோட இஷ்டம்னு சொல்லிட்டாங்க. தேவைப்பட்டால், மாப்பிள்ளையும் திருச்சிக்கே டிரான்ஸ்ஃபர் வாங்கிட்டு வந்துடலாமாம்...''

பூங்கோதையால் நம்பவே முடியவில்லை.

''ஒருவேளை சினிமாவில் வருவதைப் போல் கல்யாணத்துப் பிறகு சங்கர் மீதுள்ள பகைக்காக, என்னைக் கொடுமைப்படுத்திப் பழிவாங்குவாரோ?''

— அவளுக்குப் புரியவில்லை. ஏதேதோ கற்பனை செய்தாள்.

அடுத்த நாள் அலுவலகத்தில் அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தஞ்சையில் ராஜன் வேலை பார்த்த பேங்கிற்கு 'டிரங்க்—கால்' புக் பண்ணினாள்.

''ஹலோ நான் திருச்சியிலே இருந்து பூங்கோதை பேசறேன்...''

''ஹலோ! வெரி கிளாட்! என்ன விஷயம்

பூங்கோதை...?''

''நாளைக்கு லீவு போட்டுட்டுத் திருச்சிக்கு வந்து, என்னை ஆபீஸ்லே வந்து பார்க்க முடியுமா? ப்ளீஸ்... முக்கியமாப் பேச வேண்டியிருக்கு...''

''ஓ.... ஷ்யூர்! நிச்சயமா வர்றேன்...''

மலைக்கோட்டையின் பாறைச் சரிவில் உட்கார்ந்திருந்த இருவரையும் மாலைத் தென்றல் இதமாக வருடிச் சென்றது.

''பூங்கோதை, நீ என்ன கேட்க நினைக்கிறேன்னு என்னாலே ஊகிக்க முடியுது!''

''சொல்லுங்க பார்ப்போம்..''

''நீயும், சங்கரும் காதலிச்ச விஷயம் எனக்குத் தெரியுமே. தெரிஞ்சிருந்தும் எப்படி இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிச்சேன்னு கேட்கப் போறே...?''

''ஆமாம்... உங்களால் எப்படி...?''

''காதல்ங்கிறது நமக்குப் பொருத்தமான ஒருத்தரை வாழ்க்கைத் துணையா அடைய நாம் செய்யற ஒரு முயற்சி. அவ்வளவுதான். நாம செய்யற எல்லா முயற்சியும் வெற்றி பெற்று விடுகிறதா என்ன? நான் கூடத்தான் இரண்டு வருஷமா கடும் முயற்சி பண்ணினேன். தேர்வு எழுதி ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணிடணும்னு. முடியலை. முயற்சியிலே தோல்விதான் கிடைச்சுது. அதுக்காக வேறு வேலைக்கே போக மாட்டேன்னு இருந்துட முடியுமா என்ன? இப்ப பேங்கிலே ஆபீஸராயிட்டேன். காதலும் அப்படித்தான். அதிலே வெற்றி கிட்டாம போறது ரொம்ப சகஜம். ஒரு பெண், ஒரு காலத்திலே ஒருத்தனைக் காதலித்தது, வேறு ஒருவன் அவளைக் 'கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று சொல்லுவதற்குக் காரணமாக அமையுமளவிற்குப் பெரிய குற்றம் என்று நான் நினைக்கவில்லை...'' — தீர்க்கமாகப் பேசினான் ராஜன். அவனது பேச்சைக் கேட்கக் கேட்க, அவளது மனம் குதூகலித்தது. இருந்தாலும் சந்தேகம் முழுமையாக அகன்று விடவில்லை.

''இருந்தாலும்...'', தயங்கி விட்டுப் பிறகு தொடர்ந்து பேசினாள் பூங்கோதை. ''நான் காதலிச்சது, கல்லூரி நாட்களில் உங்க எதிரியா இருந்த ஒருத்தரை. அதுதான் பயமா இருக்கு. நானும் சங்கரும் நெருக்கமாப் பழகியிருக்கோம். அது உங்களுக்கே தெரியும். அதனாலே கல்யாணத்துக்குப் பிறகு உங்களுக்கு விபரீதமான சந்தேகங்கள் வரலாம். நாங்க இரண்டு பேரும் தப்பான முறைகளிலே... அதாவது...'' மீண்டும் தயங்கினாள்.

ராஜன் புன்னகையோடு அவளையே பார்த்தான்.

''நெறி கெட்டுப் பழகியிருப்போமோன்னு உங்களுக்குச் சந்தேகம் வந்துட்டா நம்ம வாழ்க்கையே விபரீதமாகிடும். அதான் பயமா இருக்கு...?'' — ராஜனைப் பார்க்காமல், உட்கார்ந்திருந்த பாறையைப் பார்த்தவாறே சொல்லி முடித்தாள் பூங்கோதை.

''இல்லை பூங்கோதை. நீ தப்பாப் புரிஞ்சுகிட்டிருக்கே. ஓர் ஆள் நமக்குப் பிடிக்காதவரா இருக்கலாம். அதுக்காக முழுக்க முழுக்க அவரு கெட்டவருன்னு அர்த்தமில்லை. அவருக்கு நல்ல குணங்களே இல்லேன்னும் அர்த்தமாகிடாது. கல்லூரி நாட்களில் எனக்கும் சங்கருக்கும் கருத்து வேறுபாடுகள் இருந்ததும், அதனால் பெரிய பிரச்னைகள் ஏற்பட்டதும் உண்மைதான். அதுக்காக அவனை நான் ஓர் அயோக்கியன்னு சொல்லி விட முடியுமா என்ன? பெரியவங்களே, 'பகைமை பாராட்டாதே'ன்னு தான் சொல்லியிருக்காங்களே தவிர, 'பகைவனைப் பாராட்டாதே'ன்னு சொல்லலையே! எனக்கு நல்லாத் தெரியும் பூங்கோதை — பெண்கள் விஷயத்திலே சங்கர் ஓர் உண்மையான 'ஜென்டில்மேன்' கல்லூரியிலே 'ஹீரோ' மாதிரி இருந்தவன் சங்கர். அவன் விரும்பியிருந்தால் எத்தனையோ பெண்களோடு ஜாலியாச் சுத்தியிருக்கலாம். ஆனால் அவன் உன் ஒருத்தியை மட்டுமே சுத்தி வந்தான். அவனை நான் தப்பா நினைக்கவே இல்லை. அதனாலே நீ நினைக்கிற மாதிரி விபரீதச் சந்தேகமெல்லாம், எனக்கு நிச்சயம் வராது. நீ என்னை நம்பலாம்...''

ராஜன் சொல்லி முடித்த போது பூங்கோதையின் முகம் பூரணமாக மலர்ந்திருந்தது.

---

''நம்ம போலீஸ் ஸ்டேஷன் வாசலில் 'நாங்கள் உங்களுக்கு உதவலாமா?'ன்னு போர்டு வைச்சது தப்பாப் போச்சு, ஸார்!''

''ஏன்?''

''ஐந்து, பத்து என்று கடன் உதவி கேட்டு அடிக்கடி யாராவது வந்து நிக்கறாங்க!''

— லலிதா செல்லப்பா.



# ஆயுர்வேத முறையில் புற்று நோய்க்கு சிகிச்சை



லக்சப்பா அனுமந்தப்பா பூஜாரியாகிய எனக்கு வயது 39. எனது இடது காலில் சர்கோமா மிருதுவான தசையில் (Sarcoma Soft Tissue) புற்று நோயினால் அல்லல்பட்டுக் கொண்டிருந்தேன். இரண்டு முறை ச ஸ்திர சிகிச்சை செய்து கொண்டும் கெமோ தெரபி மற்றும் ரேடியம் சிகிச்சை செய்து கொண்டும் (Chemotherapy and Radiation) எந்த குணமும் தெரியவில்லை.

நான் நம்பிக்கை தளர்ந்த நேரத்தில் கன்னட பத்திரிகை ஒன்றில் ஹைதராபாத் சிக்கட்பள்ளியைச் சேர்ந்த ஆயுர்வேத டாக்டர் எம். பாபுராவ் அவர்களைப் பற்றி அறிந்தேன். நான் டாக்டர் பாபுராவ் அவர்களிடம் கடந்த ஒன்பது மாதங்களாக மருந்து சாப்பிட்டு வந்தேன். இப்பொழுது நான் பூரண குணம் அடைந்திருக்கிறேன்.

நான் இந்த விளம்பரம் செய்வதன் நோக்கம் என்னவென்றால் இதே வியாதியினால் கஷ்டப்படும் நோயாளிகள் டாக்டர் பாபுராவை அணுகி சிகிச்சை பெற்று குணம் பெறலாம்.

**லக்சப்பா அனுமந்தப்பா பூஜாரி**

ஜவுளி வியாபாரி,
முடல்கி போஸ்ட், கோகக் தாலுக்கா,
பெல்காம் ஜில்லா, கர்னாடகா.

காலஅட்டவணை

| விலாசம் | போன் நம்பர் | பார்க்கும் கிழமைகள் |
|---|---|---|
| டாக்டர் எம். பாபுராவ் வீடு<br>கேன்ஸர் இன்பர்மரி<br>2-1610, செடம்ரோடு<br>மொமூலா கூடம்<br>குல்பார்கா (கர்னாடகா) | 21452 | பிரதி திங்கள், செவ்வாய் |
| கேன்ஸர் இன்பர்மரி<br>1-1-271/3, சிக்கட் பள்ளி<br>பஸ் ஸ்டாண்டு அருகில்<br>ஹைதராபாத் 20 | 64735 | பிரதி வெள்ளி |
| C/o ஹோட்டல் ராம் இண்டர்நேஷனல்<br>114 கோடம்பாக்கம் நெடுஞ்சாலை<br>சென்னை 34 | 473350<br>473422 | பிரதி சனி |
| C/o ஹோட்டல் பிருந்தாவன்<br>மகாத்மா காந்தி ரோடு<br>பெங்களூர் | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o ஹோட்டல் மிட்டவுன்<br>அன்டேரி (மேற்கு<br>ரயில்வே ஸ்டேஷன் எதிரில்)<br>பம்பாய் | 6286635<br>6203476<br>6288882 | பிரதி புதன் |

# பொன்னியின் செல்வன்






## அத்தியாயம் 11

## மண்டபம் விழுந்தது!

மின்னல் வெளிச்சத்தில், அங்கே நின்று பேசியவர்கள் இருவருடைய தோற்றங்களையும் பழுவேட்டரையர் ஒரு கணம் பார்த்துத் தெரிந்து கொண்டார். அவர்களில் ஒருவனாகிய ரவிதாஸனை இரண்டொரு தடவை அவர் தமது அரண்மனையிலேயே பார்த்ததுண்டு. அவன் மந்திர வித்தைகளில் தேர்ந்தவன் என்று நந்தினி கூறியதுண்டு. அவருடைய சகோதரன் காலாந்தக கண்டன் இந்த மந்திரவாதியைப் பற்றியே தான் சந்தேகப்பட்டு அவரை எச்சரித்திருக்கிறான். இன்னொருவன், கடம்பூர் அரண்மனையில் வேலனாட்டம் ஆடிய தேவராளன். அவனைத் தாம் பார்த்தது அதுதானா முதல் தடவை? அவனுடைய உண்மைப் பெயர் என்ன?.... அப்படியும் ஒரு வேளை இருக்க முடியுமா?..... நெடுங்காலத்துக்கு முன்பு அவரால் அரசாங்க உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்ட பரமேச்சுவரனா அவன்?.....

இருக்கட்டும்; இவர்கள் மேலும் என்ன பேசுகிறார்கள் கேட்கலாம்.

''ரவிதாஸா! நீ இப்படித்தான் வெகுகாலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாய். 'நாள் நெருங்கி விட்டது' 'யமன் நெருங்கி விட்டான்' என்றெல்லாம் பிதற்றுகிறாய்! யமன் வந்து யார் யாரையோ கொண்டு போகிறான்! ஆனால் மூன்று வருஷங்களாகப் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் சுந்தர சோழனைக் கொண்டு போவதாக இல்லை. அவனுடைய குமாரர்களையோ யமன் நெருங்குவதற்கே அஞ்சுகிறான். ஈழ நாட்டில் நாம் இரண்டு பேரும் எத்தனையோ முயன்று பார்த்தோமே?....''

''அதனால் குற்றமில்லை, அப்பனே! யமதர்மராஜன் உன்னையும் என்னையும் விடப் புத்திசாலி! மூன்று பேரையும் ஒரே தினத்தில் கொண்டு போவதற்காக இத்தனை காலமும் காத்துக் கொண்டிருந்தான். அந்தத் தினம் நாளைக்கு வரப் போகிறது. நல்ல வேளையாக, நீயும் இங்கே வந்து சேர்ந்தாய்! சரியான யமதூதன் நீ! ஏன் இப்படி நடுங்குகிறாய்? கொள்ளிட வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாயா? படகு கொண்டு வந்து வைத்திருக்கிறாய் அல்லவா?''

''வைத்திருக்கிறேன். ஆனால் படகை வெள்ளமும் காற்றும் அடித்துக் கொண்டு போகாமல் காப்பாற்றுவது பெரும் பாடாய்ப் போய் விட்டது! உன்னை எத்தனை நேரம் எங்கெல்லாம் தேடுவது? .....ரவிதாஸா! ஏன் என் உடம்பு நடுங்குகிறது என்று கேட்டாய் அல்லவா? சற்று முன்னால், யமதர்ம ராஜனை நான் நேருக்கு நேர் பார்த்தேன். இல்லை, இல்லை; யமனுக்கு அண்ணனைப் பார்த்தேன். அதனால் சற்று உண்மையிலேயே பயந்து போய் விட்டேன்....''

''பரமேச்சுரா! என்ன உளறுகிறாய்? யம

அமரர் கல்கி

னாவது. அவன் அண்ணனாவது? அவர்களைக் கண்டு உனக்கு என்ன பயம்? அவர்கள் அல்லவோ உன்னைக் கண்டு அஞ்ச வேண்டும்?''

ரவிதாஸன் மற்றவனைப் 'பரமேச்சுவரன்' என்று அழைத்ததும் பழுவேட்டரையர் துணுக்குற்றார். தாம் சந்தேகப் பட்டது உண்மையாயிற்று! யமதர்மனுடைய அண்ணன் என்று அவன் குறிப்பிட்டது தம்மைத்தான் என்பதையும் அறிந்து கொண்டார்: அவனை உடனே நெருங்கிச் சென்று கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொல்ல வேணுமென்று அவர் உள்ளமும் கைகளும் துடித்தன. மேலும் அவர்களுடைய பேச்சைக் கேட்க வேணும் என்ற ஆவலினால் பொறுமையாக இருந்தார். நந்தினியைப் பற்றி அவர்கள் இன்னும் பேச்சு எடுக்க வில்லை. சுந்தரசோழரின் குடும்பத்துக்கே நாளை யமன் வரப்போகிறான் என்று மந்திரவாதி கூறியதன் கருத்து என்ன? உண்மையிலேயே ஜோதிடம் பார்த்துச் சொல்லுகிறானோ? இவனுடைய மந்திர சக்தியைப் பற்றி நந்தினி கூறியதெல்லாம் உண்மைதானோ? ஒரு வேளை இவன் கூறுகிறபடி தெய்வாதீனமாக நடந்து விட்டால்?... தம்முடைய நோக்கம் நிறைவேறுவது எளிதாகப் போய் விடும்! சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கிடு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படாது! ஆனால் இந்தப் பரமேச்சுவரன்?..... இவனுக்கு என்ன இந்த விஷயத்தில் கவலை? ஆம்; ஆம்; இருபது வருஷங்களுக்கு முன்னால் 'சோழ குலத்தையே அழித்து விடப் போகிறேன்' என்று சபதம் செய்து விட்டுப் போனவன் அல்லவா இவன்?.... ஆகா! தம்மைப் பற்றித்தான் அவன் ஏதோ பேசுகிறான்! என்ன சொல்லுகிறான் என்று கேட்கலாம்!

''நீ என்னிடம் சொல்லியிருந்தபடி இன்று காலையே இங்கு நான் வந்தேன். ஆனால் உன்னைக் காண வில்லை. காற்றிலும் மழையிலும் அடிபட்டு எங்கேயாவது சமீபத்தில் ஒதுங்கி இருக்கிறாயா என்று சுற்றுப்புறமெல்லாம் தேடி அலைந்தேன். கொள்ளிடத்து உடைப்புக்கு அருகில் ஒரு சிறிய கோவில் இருக்கிறது. அதில் யாரோ படுத்திருப்பது போலத் தோன்றியது. ஒருவேளை நீதான் அசந்து தூங்குகிறாயோ என்று அருகில் போய்ப் பார்த்தேன்..... யாரைப் பார்த்தேன் என்று நினைக்கிறாய்? சாக்ஷாத் பெரிய பழுவேட்டரையனைத்தான்!....''

மந்திரவாதி ஹாஹாஹா என்று உரத்துச் சிரித்தான். அதைக் கேட்ட வனத்தில் வாழும் பறவைகள் 'கிறீச்' 'கிறீச்' என்று சத்தமிட்டன. ஊமைக் கோட்டான்கள் உறுமின.

''பழுவேட்டரையனைப் பார்த்தாயா? அல்லது அவனுடைய பிசாசைப் பார்த்தாயா?'' என்று ரவிதாஸன் கேட்டான்.

''இல்லை; பிசாசு இல்லை. குப்புறப் படுத்திருந்தவனைத் தொட்டுப் புரட்டிப் போட்டு முகத்தை நன்றாக உற்றுப் பார்த்தேன். ரவிதாஸா! யமனுக்கு அண்ணன்கள் இரண்டு பேர் இருக்க முடியுமா? பழுவேட்டரையனைப் போலவே, அதே முகம், அதே மீசை, அதே காய வடுக்கள் – இவற்றுடன் இன்னொரு மனிதன் இருக்க முடியுமா?''

''நீ பார்த்தவன் பழுவேட்டரையன் தான்! சந்தேகமில்லை. நேற்று மாலை பழுவேட்டரையன் படகில் ஏறிக்கொள்ளிடத்தைத் தாண்டிக் கொண்டிருந்தான். கரையருகில் வந்தபோது படகு காற்றினால் கவிழ்ந்து விட்டது. அவனுடைய பரிவாரங்களில் தப்பிப் பிழைத்துக் கரை யேறியவர்கள் இப்போது கூடக் கொள்ளிடக் கரை யோரமாகப் பழுவேட்டரையனைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அவன் வெள்ளத்தில் மூழ்கிச் செத்துப் போயிருக்கலாம் என்று சந்தேகப்படுகிறார்கள். உடைப்பு வரையில் போய்ப் பார்த்து விட்டு அவர்கள் திரும்பி வரும்போது பேசியதை நான் கேட்டேன். ஆகையால், நீ பார்த்தவன் பழுவேட்டரையனாகவே இருக்கக்கூடும். ஒருவேளை அவனுடைய பிரேதத்தைப் பார்த்தாயோ, என்னமோ!''

''இல்லை, இல்லை. செத்துப் போயிருந்தால் கண் விழிகள் தெரியுமா? நான் புரட்டிப் பார்த்தவனுடைய கண்கள் நன்றாக மூடியிருந்தன. களைத்துப் போய்த் தூங்கிக் கொண்டிருந்தான் போலிருக்கிறது.....''

''முட்டாளே! நீ என்ன செய்தாய்! அவனைச் சும்மா விட்டு விட்டு வந்தாயா? தலையிலே ஒரு கல்லைத் தூக்கிப் போட்டிருக்கக் கூடாதா?....''

''பழுவேட்டரையன் தலையைப் பற்றி உனக்குத் தெரியாது. அவன் தலையிலே கல்லைப் போட்டால், கல்தான் உடைந்து தூள் தூளாகும்!''

''அப்படியானால், கொள்ளிடத்து உடைப்பு வெள்ளத்திலாவது அவனை இழுத்து விட்டிருக்கலாமே?''

நான்தான் சொன்னேனே? அவனைக் கண்டதும் எனக்கு யமனுடைய அண்ணனைக் கண்டது போல் ஆகிவிட்டது. கடம்பூரில் அவன் முன்னால் வேலனாட்டம் ஆடியபோது கூட என் நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொண்டு தானிருந்தது. என்னை அவன் அடையாளங் கண்டு கொண்டானானால்.....''

''அதை நினைத்து இப்போது எதற்கு நடுங்குகிறாய்?''

''அவன் உயிரோடிருக்கும் வரையில் எனக்குக் கொஞ்சம் திகிலாய்த்தானிருக்கும். நீ சொன்னபடி செய்யாமற் போனோமே, அவனை வெள்ளத்தில் புரட்டித் தள்ளாமல் வந்து விட்டோமே என்று கவலையாயிருக்கிறது....''

''ஒரு கவலையும் வேண்டாம். ஒரு விதத்தில் பெரிய பழுவேட்டரையன் உயிரோடிருப்

பதே நல்லது. அப்போதுதான், சுந்தர சோழனும் அவனுடைய பிள்ளைகளும் இறந்து ஒழிந்த பிறகு சோழ நாட்டுச் சிற்றரசர்கள் இரு பிரிவாய்ப் பிரிந்து நின்று சண்டையிடுவார்கள். பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களும் ஒரு பக்கத்திலும் கொடும்பாளூர் வேளானும் திருக்கோவலூர் மலையமானும் இன்னொரு பக்கத்திலும் இருந்து சண்டையிடுவார்கள். அது நம்முடைய நோக்கத்துக்கு மிக்க அநுகூலமாயிருக்கும். அவர்கள் தங்களுக்குள் சண்டையிடும் போது நாம் பாண்டிய நாட்டில் இரகசியமாகப் படை திரட்டிச் சேர்க்கலாம்.....''

''ரவிதாஸா! 'அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா' என்ற கதையாகப் பேசுகிறாய்! சுந்தர சோழனுக்குக்கும் அவனுடைய இரு புதல்வர்களுக்கும் நாளைக்கு இறுதி நேர்ந்தால் அல்லவா நீ சொன்னபடி சோழ நாட்டுத் தலைவர்கள் சண்டை போட்டுக் கொள்வார்கள்? மூன்று பேருக்கும் நாளைக்கே முடிவு வரும் என்பது என்ன நிச்சயம்? உனக்கு ஒரு செய்தி தெரியுமா?...''

''எதைச் சொல்லுகிறாய்?''

''நாகைப் பட்டினத்தில் அருள்மொழி வர்மன் உயிரோடிருக்கிறானாம்! மக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவனே சோழ நாட்டின் சக்கரவர்த்தி ஆக வேண்டும் என்று ஆர்ப்பரிக்கிறார்களாம்! நீ கேள்விப்பட்டாயா?''

ரவிதாஸன் மறுபடியும் சிரித்துவிட்டு '' நான் கேள்விப்படவில்லை. எனக்கே அது தெரியும். அருள்மொழிவர்மனைப் புத்த விஹாரத்திலிருந்து வெளிப்படுத்தியது யார் என்று நினைக்கிறாய்? நம் ரேவதாஸக் கிரம வித்தனுடைய மகள் ராக்கம்மாள்தான்! அவள்தான் படகோட்டி முருகய்யனுடைய மனைவி!'' என்றான்.

''அதனால் என்ன? அருள்மொழி வர்மன் வெளிப்பட்டதனால்என்னலாபம்? அவனை இனி எப்போதும் லட்சக்கணக்கான ஜனங்கள் அல்லவா சூழ்ந்து கொண்டிருப்பார்கள்? ஈழ நாட்டில் அவன் இரண்டு மூன்று பேருடன் இருந்த போதே நம்முடைய முயற்சி பலிக்கவில்லையே?'' என்றான் தேவராளன்.

''அதுவும் நல்லதுதான் என்று சொன்னேனே? மூன்று பேருக்கும் ஒரே நாளில் யமன் வருவதற்கு இருக்கும் போது....''

''ரவிதாஸா! லட்சம் பேருக்கு மத்தியில் உள்ள இளவரசனிடம் யமன் எப்படி நெருங்குவான்? அதை நீ சொல்ல வில்லையே?''

''நெருங்குவான், அப்பனே, நெருங்குவான்! யானைப்பாகனுடைய அங்குசத்தின் நுனியில் யமன் உட்கார்ந்திருப்பான்! சரியான சமயத்தில் இளவரசனுடைய உயிரை வாங்குவான்! பரமேச்சுவரா! சோழ நாட்டு மக்கள் இளவரசனை யானை மீது ஏற்றி வைத்து ஊர்வலம் விட்டுக் கொண்டு தஞ்சையை நோக்கி வருவார்கள். அந்த யானையை ஓட்டும் பாகனுக்கு வழியில் ஏதாவது ஆபத்து வந்து விடும். அவனுடைய இடத்தில் நம் ரேவதாஸக் கிரமவித்தன் யானைப் பாகனாக அமருவான்! அப்புறம் என்ன நடக்கும் என்பதை நீயே ஒருவாறு ஊகித்துக் கொள்!''

''ரவிதாஸா! உன் புத்திக் கூர்மைக்கு இணை இல்லை என்பதை ஒத்துக் கொள்கிறேன். கிரமவித்தன் எடுத்த காரியத்தை முடிப்பான் என்று நாம் நம்பியிருக்கலாம். சுந்தரசோழன் விஷயம் என்ன? அவனுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்?'' என்றான் தேவராளன்.

''பழுவேட்டரையனுடைய கருவூல நிலவறையில் சோமன் சாம்பவனை விட்டு விட்டு வந்திருக்கிறேன். கையில் வேலாயுதத்துடன் விட்டு வந்திருக்கிறேன். அங்கேயிருந்து சுந்தரசோழன் அரண்மனைக்குச் சுரங்கப்பாதை போகிறது. சுந்தரசோழன் படுத்திருக்கும் இடத்தையே சோமன் சாம்பவனுக்குச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். இரண்டு கண்ணும் தெரியாத குருடன் கூட நான் குறிப்பிட்ட இடத்தில் நின்று வேலை எறிந்து சுந்தரசோழனைக் கொன்றுவிடலாம். சோமன் சாம்பவனை 'அவசரப்படாதே! நாளை வரையில் பொறுத்துக் கொண்டிரு!' என்று எச்சரித்து விட்டு வந்திருக்கிறேன்......''

''அது எதற்காக? சமயம் நேரும் போது காரியத்தை முடிப்பதல்லவா நல்லது?''

''முட்டாளே! சுந்தரசோழன் முன்னதாகக் கொலையுண்டால், அந்தச் செய்தி கேட்டதும் அவன் குமாரர்கள் ஜாக்கிரதையாகிவிட மாட்டார்களா? அந்த நோயாளிக் கிழவன் இறந்துதான் என்ன உபயோகம்? அது இருக்கட்டும்; நீ என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்? கடம்பூர் மாளிகையில் எல்லாரும் எப்படியிருக்கிறார்கள்? அங்கே நாளை இரவு நடக்கப் போகிற காரியம் அல்லவா எல்லாவற்றையும் விட முக்கியமானது?''

''கடம்பூரில் எல்லாம் கோலாகலமாகத்தான் இருந்து வருகிறது. கலியாணப் பேச்சும்காதல்நாடகங்களுமாயிருக்கின்றன. நீ என்னமோ அந்தப் பழுவூர் ராணியை நம்பியிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை.....''

''பழுவூர் ராணியா அவள்? பாண்டிமாதேவி என்று சொல்! வீர பாண்டியர் இறப்பதற்கு இரண்டு நாளைக்கு முன்னால் அவளைத் தம் பட்ட மகிஷியாக்கிக் கொண்டதை மறந்து விட்டாயா? வீர பாண்டியர் மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்க அவள் சபதம் செய்திருப்பதை மறந்து விட்டாயா? ஒரு வாரத்துக்கு முன்னால் இதே இடத்தில் அவள் பாண்டிய குமாரன் கையிலிருந்து பாண்டிய குலத்துவீரவாளைப் பெற்றுக் கொள்ள வில்லையா....?''

''ஆமாம், ஆமாம்! ஆனால் நேற்று மாலை உன் பாண்டிமா தேவி வீர நாராயண ஏரியில் உல்லாஸப் படகு யாத்திரை செய்து

விட்டுத் திரும்பி வந்ததை நீ பார்த்திருக்க வேண்டும்.....''

"உல்லாஸமாயிராமல் பின் எப்படியிருக்க வேண்டும் என்கிறாய்? மனத்தில் உள்ளதை மறைத்து வைக்கும் வித்தையை நந்தினியைப் போல் கற்றிருப்பவர் யாரும் கிடையாது. இல்லாவிட்டால், பழுவேட்டரையனின் அரண்மனையில் மூன்று வருஷம் காலந் தள்ள முடியுமா? அங்கே இருந்தபடி நம்முடைய காரியங்களுக்கு இவ்வளவு உதவி தான் செய்திருக்க முடியுமா? ஆமாம், பழுவேட்டரையனை நீ சற்றுமுன் கொள்ளிடக் கரைத் துர்க்கையம்மன் கோவிலில் பார்த்த தாகக் கூறினாயே! அவனை ஏற்றி வந்த படகு கவிழ்ந்ததைப் பற்றி நானும் கேள்விப் பட்டேன். பழுவேட்டரையன் எப்போது கடம்பூரிலிருந்து புறப்பட்டான்? ஏன்?....''

''ஏன் என்று எனக்கு உறுதியாகத் தெரியாது. மதுராந்தகத் தேவனைக் கடம்பூருக்கு அழைத்து வரப் புறப்பட்டதாகச் சொன்னார்கள். நேற்றுக் காலை பழுவேட்டரையன் கிளம்பிச் சென்றான். அவன் சென்ற பிறகு இளவரசர்கள் வேட்டையாடச் சென்றார்கள். இளவரசிமார்கள் வீரநாராயண ஏரிக்கு ஜலக்கிரீடை செய்யச் சென்றார்கள். இளவரசர்களும் இளவரசிகளும் திரும்பி வந்த குதூகலமான காட்சியை நீ பார்த்திருந்தாயானால் இவ்வளவு நம்பிக்கையோடு பேச மாட்டாய்!....''

''அதைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். பழுவேட்டரையனைத் தஞ்சைக்கு அனுப்பி வைத்ததிலிருந்தே பாண்டிமா தேவியின் மனத்தை அறிந்து கொள்ளலாமே?....''

''பெண்களின் மனத்தை யாரால் அறிய முடியும்? அந்தக் கிழவனை ஊருக்கு அனுப்பியது பழிவாங்கும் நோக்கத்துக்காகவும் இருக்கலாம்; காதல் நாடகம் நடத்துவதற்காகவும் இருக்கலாம்...''

''என்ன உளறுகிறாய், பரமேச்வரா! நந்தினி அந்தப் பழைய கதையை அடியோடு மறந்து விட்டாள். கரிகாலனை அவள் இப்போது விஷம் போலத் துவேஷிக்கிறாள்!''

''கரிகாலனைப் பற்றி நான் சொல்லவில்லை. அவனுடைய தூதன் வந்தியத்தேவனைப் பற்றிச் சொல்லுகிறேன். இரண்டு மூன்று தடவை நந்தினி அவனைத் தப்பிச் செல்லும்படி விட்டதை நீ மறந்து விட்டாயா?''



ந்திரவாதி கலகலவென்று சிரித்து விட்டு, ''ஆமாம்; வந்தியத்தேவன் எதற்காகப் பிழைத்திருக்கிறான் என்பது சீக்கிரத்திலேயே தெரியும். அது தெரியும் போது நீ மட்டுந்தான் ஆச்சரியப்படுவாய் என்று எண்ணாதே! இன்னும் ரொம்பப் பேர் ஆச்சரியப்படுவார்கள்! முக்கியமாக, சுந்தர சோழரின் செல்வக் குமாரி குந்தவை ஆச்சரியப்படுவாள். அவள் எந்தச் சுகுமார வாலிபனுக்குத் தன் உள்ளத்தைப் பறி கொடுத்திருக்கிறாளோ, அவனே அவளுடைய தமையன் ஆதித்த கரிகாலனைக் கொன்றவன் என்று அறிந்தால் ஆச்சரியப்பட மாட்டாளா?'' என்றான்.

''என்ன சொல்கிறாய், ரவிதாஸா! உண்மையாகவே வந்தியத்தேவனா கரிகாலனைக் கொல்லப் போகிறான்? அவன் நம்மோடு சேர்ந்து விட்டானா, என்ன?''

''அதெல்லாம் இப்போது கேட்காதே! கரிகாலனைக் கொல்லும் கை யாருடைய கையாக இருந்தால் என்ன? பாண்டிய குலத்து மீன் சின்னம் பொறித்த வீர வாள் அவனைக் கொல்லப் போகிறது. அவனைக்

கொன்ற பழி வந்தியத்தேவன் தலை மீது விழப் போகிறது! நம்முடைய ராணியின் சாமர்த்தியத்தைப் பற்றி இப்போது என்ன சொல்லுகிறாய்?''

''நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும். பிற்பாடு கேள், சொல்லுகிறேன்.''

''வேறு எது நடந்தாலும் நடக்கா விட்டாலும், கரிகாலனுடைய ஆவி நாளை இரவுக்குள் பிரிவது நிச்சயம். நந்தினி அவள் ஏற்றுக் கொண்ட பொறுப்பை நிறைவேற்றியே தீருவாள். நம்முடைய பொறுப்பையும் நாம் நிறைவேற்ற வேண்டும்......''

''நம்முடைய பொறுப்பு என்ன?''

''நாளை இரவு கடம்பூர் மாளிகையிலிருந்து வெளியேறும் சுரங்கப் பாதையில் ஆயத்தமாகக் காத்திருக்க வேண்டும். காரியம் முடிந்ததும் நந்தினி அதன் வழியாக வருவாள். அவளை அழைத்துக் கொண்டு இரவுக்கிரவே கொல்லி மலையை அடைந்துவிட வேண்டும். அங்கே இருந்து கொண்டு, சோழ நாட்டில் நடைபெறும் அல்லோலகல்லோலத்தைப் பார்த்துக் கொண்டிருப்போம். ஒருவேளை செளகரியப்பட்டால்......''

''செளகரியப்பட்டால், என்ன?''

''பழுவேட்டரையனின் கருவூல நிலவறையில் சேர்த்து வைத்திருக்கும் பொருள்களையெல்லாம் சுரங்கப் பாதை வழியாகக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து கொண்டு போன பொருள்களைக் கொண்டே சோழ நாட்டின் மீது போர் தொடுக்கப் படை திரட்டுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கும்?''

இவ்விதம் கூறிவிட்டு மறுபடியும் ரவிதாஸன் சிரித்தான்.

தேவராளனாக நடித்த பரமேச்சுவரன், ''சரி, சரி! ஆகாசக் கோட்டையை ரொம்பப் பெரிதாகக் கட்டி விடாதே! முதலில் கொள்ளிடத்தைத் தாண்டி அக்கரையை அடைந்து கடம்பூர் போய்ச் சேரலாம். கடம்பூரில் நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும்! பிறகு, பழுவேட்டரையனுடைய பொக்கிஷத்தைக் கொள்ளையடிப்பது பற்றி யோசிக்கலாம். என்ன சொல்லுகிறாய்? இப்போதே கிளம்பலாமா? இரவே கொள்ளிடத்தைத் தாண்டி விடுவோமா?'' என்றான்.

''வேண்டாம், வேண்டாம்! பொழுது விடிந்ததும் படகில் ஏறினால் போதும். அதற்குள் காற்றும் நன்றாக அடங்கிவிடும். ஆற்று வெள்ளமும் கொஞ்சம் குறைந்து விடும்.''

''அப்படியானால், இன்றிரவு இந்தப் பள்ளிப் படை மண்டபத்திலேயே படுத்திருக்கலாமா?''

ரவிதாஸன் சற்று யோசித்தான். அப்போது சற்றுத் தூரத்தில் நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது. ரவிதாஸனுடைய உடல் நடுங்கிற்று.

''ரவிதாஸா! கேவலம் நரிகளின் குரலைக் கேட்டு ஏன் இப்படி நடுங்குகிறாய்?'' என்றான் தேவராளன்.

''அப்பனே! கோடிக்கரைப் புதை சேற்றில் கழுத்து வரையில் நீ புதைபட்டிருந்து, சுற்றிலும் நூறு நரிகள் நின்று உன்னைத் தின்பதற்காகக் காத்திருக்கும் பயங்கரத்தை நீ அனுபவித்திருந்தால், அப்படிச் சொல்ல மாட்டாய்! சிங்கத்தின் கர்ஜனையையும் மத யானையின் ஓலத்தையும் கேட்டு, எனக்குப் பயம் உண்டாவதில்லை. நரியின் ஊளையைக் கேட்டால் குலை நடுங்குகிறது. வா! வா! இந்தச் சுடுகாட்டில் இராத் தங்க வேண்டாம். வேறு எங்கேயாவது கிராமத்துக்குப் பக்கமாயுள்ள கோவில் அல்லது சத்திரத்தில் தங்குவோம். இல்லாவிட்டால், கொள்ளிடக் கரையிலுள்ள துர்க்கை கோவிலைப் பற்றிச் சொன்னாயே? அங்கே போவோம். இன்னமும் அந்தக் கிழவன் அங்கே படுத்திருந்தால், வெள்ளத்தில் அவனை இழுத்து விட்டு விடலாம். அதுவே அவனுக்கு நாம் செய்யும் பேருதவியாயிருக்கும். நாளைக்கு மறுநாள் வரையில் அவன் உயிரோடிருந்தால், ரொம்பவும் மனத்துயரத்துக்கு ஆளாக நேரிடும்!''

மேற்கூறிய சம்பாஷணையை ஏறக்குறைய ஒன்றும் விடாமல் பெரிய பழுவேட்டரையர் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்கள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவருடைய செவிகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருந்தது. அவருடைய நெஞ்சு ஒரு பெரிய எரிமலையின் கர்ப்பத்தைப் போல் தீக்குழம்பாகிக் கொதித்தது. தாம் காதலித்துக் கலியாணம் செய்து கொண்ட பெண், வீரபாண்டியன் மரணத்துக்காகச் சோழ குலத்தின் மீது பழி வாங்க வந்தவள் என்பதும், மூன்று வருஷங்களாக அவள் தம்மை ஏமாற்றி வருகிறாள் என்பதும் சொல்ல முடியாத வேதனையையும் அவமானத்தையும் அவருக்கு உண்டாக்கின.

ஆறு தலைமுறையாகச் சோழர் குலத்துக்கும் பழுவூர் வம்சத்துக்கும் நிலை பெற்று வளர்ந்து வரும் உறவுகளை அச்சமயம் பழுவேட்டரையர் நினைத்துக் கொண்டார். பார்க்கப் போனால், சுந்தர சோழனும் அவனுடைய மக்களும் யார்? சுந்தர சோழனுடைய பாட்டி பழுவூர் வம்சத்தைச் சேர்ந்தவள் அல்லவா? சுந்தரசோழனுடைய மக்கள் மீது தமக்கு ஏற்பட்ட கோபமெல்லாம் சமீப காலத்தது அல்லவா? ஆதித்த கரிகாலன் ஏதோ சிறு பிள்ளைத்தனமாக நடந்து கொண்டான் என்பதற்காகவும் மலையமானை நமக்குப் பிடிக்கவில்லை என்பதற்காகவும், எவ்வளவு பயங்கரமான சதிச் செயல்களுக்கு இடம் கொடுத்து விட்டோம்? சோழர்



"அபாயிண்ட்மெண்ட் ஆர்டர் கிடைச்சதும் நல்ல நேரம் பார்க்கறாரே. வேலையில் சேரவா?"

"இல்லை. முதல் லஞ்சம் வாங்க...!"

— லலிதா செல்லப்பா.

குலத்தின் தீராப் பகைவர்களான பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் நம்முடைய அரண்மனையிலிருந்து கொண்டு, நம்முடைய நிலவறைப் பொக்கிஷத்திலிருந்து திருடிப் போன பொருளைக் கொண்டு, சோழ குலத்துக்கு விரோதமாகச் சதிகாரச் செயல்களைச் செய்ய அல்லவா இடம் கொடுத்து விட்டோம்? ஆகா! இந்தச் சண்டாளர்கள் சொன்னபடி நாளை இரவுக்குள் மூன்று இடங்களில் மூன்று பயங்கரமான கொலைகள் நடக்கப் போகின்றனவா? நம்முடைய உடலில் மூச்சு இருக்கும் வரையில் முயன்று அவற்றைத் தடுத்தேயாக வேண்டும். இன்னும் அறுபது நாழிகை நேரம் இருக்கிறது. அதற்குள் எவ்வளவோ காரியங்கள் செய்து விடலாம். இரவுக்கிரவே குடந்தை சென்று தஞ்சைக்கும் நாகைப்பட்டினத்துக்கும் செய்தி அனுப்பிவிட்டுக் கடம்பூருக்குக் கிளம்ப வேண்டும். இந்தப் பாதகர்கள் அங்கே போய்ச் சேர்வதற்குள் நாம் போய் விட வேண்டும்......

இவர்களைக் கடம்பூருக்கு வரும்படி விடுவதா? இந்த இடத்திலே இவர்களைக் கொன்று போட்டு விட்டுப் போய் விடுவது நல்லதல்லவா? நம்மிடம் ஆயுதம் ஒன்றுமில்லை. இல்லாவிட்டால் என்ன? வஜ்ராயுதத்தை நிகர்த்த நம் கைகள் இருக்கும் போது வேறு ஆயுதம் எதற்கு? ஆனால் இவர்கள் ஒருவேளை சிறிய கத்திகள் இடையில் செருகி வைத்திருக்கக் கூடும். அவற்றை எடுப்பதற்கே இடங்கொடுக்காமல் இரண்டு பேருடைய கழுத்தையும் இறுக்கிப் பிடித்து நெறித்துக் கொன்றுவிட வேண்டும்......

ஆனால் அவ்வாறு இவர்களுடன் இந்த இடத்தில் சண்டை பிடிப்பது உசிதமா?

இவர்களிடம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தெரிந்து கொண்டாகி விட்டது. நாம் வழிபடும் குல தெய்வமாகிய துர்க்கா பரமேசுவரியே பட்டு கவிழச் செய்து, நம்மை அவளுடைய திருக்கோவிலில் படுத்திருக்கச் செய்து, இந்தப் பயங்கர ரகசியங்களைத் தெரிந்து கொள்ளும்படியும் செய்திருக்கிறாள். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்களுக்கும் விபத்து நேரிடாமல் பாதுகாப்பதல்லவா நம்முடைய முக்கியமான கடமை? அதிலும் கடம்பூரில் கரிகாலனுக்கு எதுவும் நேராமல் தடுப்பது மிகமிக முக்கியமானது. அப்படி ஏதாவது நேர்ந்துவிட்டால், நமக்கும் நமது குலத்துக்கும் அழியாத பழிச்சொல் ஏற்பட்டு விடும். ஆறு தலைமுறையாகச் சோழ குலத்துக்குப் பழுவூர் வம்சத்தினர் செய்திருக்கும் உதவிகள் எல்லாம் மறைந்து மண்ணாகி விடும். பெண் என்று எண்ணி நமது அரண்மனையில் கொண்டு வந்து வைத்திருந்த அரக்கியினால் கரிகாலன் கொல்லப்பட்டால், அதைக் காட்டிலும் நமக்கு நேரக் கூடிய அவக்கேடு வேறு ஒன்றுமேயில்லை.

ஆகா! அத்தகைய அழகிய வடிவத்துக்குள்ளே அவ்வளவு பயங்கரமான ஆலகால விஷம் நிறைந்திருக்க முடியுமா? மூன்று உலகத்தையும் மயக்கக்கூடிய மோகனப் புன்னகைக்குப் பின்னால் இவ்வளவு வஞ்சகம் மறைந்திருக்க முடியுமா? இந்தச் சண்டாளர்கள் சற்று முன்னால் சொன்னதெல்லாம் உண்மையாக இருக்க முடியுமா?....

பழுவேட்டரையருடைய உள்ளத்தில் கோபத் தீ கொழுந்து விட்டு எரியும்படி செய்த அந்தச் சதிகாரர்களின் வார்த்தைகள் ஒருவிதத்தில் அவருக்குச் சிறிது திருப்தியையும் அளித்திருந்தன. நந்தினி சதிகாரியாக இருக்கலாம்; தம்மிடம் அன்பு கொண்டதாக நடித்து வஞ்சித்து ஏமாற்றி வந்திருக்கலாம். ஆனால் அவள் கரிகாலன் மீதோ கந்தமாறன் அல்லது வந்தியத்தேவன் மீதோ மோகம் கொண்ட காரணத்தினால் தம்மை வஞ்சிக்கவில்லை! அந்த மௌடீகச் சிறுவர்களை அவள் பொருட்படுத்தவில்லை. அவளுடைய அந்தரங்க நோக்கத்துக்கு அவர்களையும் உபயோகப்படுத்துவதற்காகவே அவர்களிடம் சுமுகமாகப் பேசிப் பழகி வருகிறாள்!

இந்தச் செய்தி பழுவேட்டரையரின் அந்தரங்கத்தின் அந்தரங்கத்துக்குள்ளே அவரையும் அறியாமல் சிறிது திருப்தியை அளித்தது. கரிகாலன் கொல்லப்படாமல் தடுக்க வேண்டியது, தம் குல கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும் தமக்கு என்றென்றைக்கும் அழியாத அபகீர்த்தி நேராமல் தடுத்துக் கொள்ளவும் மட்டும் அல்ல; நந்தினியை அத்தகைய கோரமான பாவ காரியத்திலிருந்து தப்புவிப்பதற்காகவுந்தான். ஒருவேளை அவளுடைய மனத்தையே மாற்றி விடுதல் கூடச் சாத்தியமாகலாம். இந்தச் சண்டாளச் சதிகாரர்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பதால் அவள் வேறு வழியின்றி இவர்களுக்கு உடந்தையாயிருக்கலாம் அல்லவா? இவர்களை இங்கேயே கொன்று ஒழித்து விட்டால் நந்தினிக்கு விடுதலை கிடைக்கலாம் அல்லவா?....

இவ்வாறு எண்ணி அந்த வீரக் கிழவர் தம்மையறியாமல் தொண்டையைக் கனைத்

துக்கொண்டார். சிம்ம கர்ஜனை போன்ற அந்தச் சத்தம் சதிகாரர்கள் இருவரையும் திடுக்கிடச் செய்தது.

"யார் அங்கே?" என்றான் தேவராளனாகிய பரமேச்சுவரன்.

அதற்கு மேல் தாம் மறைந்திருப்பது சாத்தியம் இல்லை. உசிதமும் ஆகாது என்று கருதிப் பெரிய பழுவேட்டரையர் வெளிப்பட்டு வந்தார்.

மழைக்கால இருட்டில் திடீரென்று தோன்றிய அந்த நெடிய பெரிய உருவத்தைக் கண்டு சதிகாரர்கள் இருவரும் திகைத்து நின்ற போது. "நான்தான் யமனுக்கு அண்ணன்!" என்று கூறி விட்டுப் பழுவேட்டரையர் சிரித்தார்.

அந்தக் கம்பீரமான சிரிப்பின் ஒலி அவ்வனப் பிரதேசம் முழுவதையும் நடு நடுங்கச் செய்தது.

வந்தவர் பழுவேட்டரையர் என்று அறிந்ததும் ரவிதாஸன், தேவராளன் இருவரும் தப்பி ஓடப் பார்த்தார்கள்! ஆனால் பழுவேட்டரையர் அதற்கு இடங் கொடுக்கவில்லை. தம் நீண்ட கரங்கள் இரண்டையும் நீட்டி இருவரையும் பிடித்து நிறுத்தினார். அவருடைய வலது கை ரவிதாஸனுடைய கழுத்தைப் பற்றியது. இடது கை தேவராளனுடைய ஒரு புஜத்தைப் பற்றியது. வஜ்ராயுதத்தைக் காட்டிலும் வலிமை பொருந்திய அந்தக் கரங்களின் பிடிகள் அவ்விருவரையும் திக்குமுக்காடச் செய்தன.

எவ்வளவுதான் கையில் வலிவு இருந்தாலும் இருவரையும் ஏக காலத்தில் சமாளிக்க முடியாது என்று எண்ணிப் பழுவேட்டரையர் தேவராளனைத் தலைகுப்புற விழும்படி கீழே தள்ளினார். கீழே விழுந்தவன் முதுகில் ஒரு காலை ஊன்றி வைத்துக் கொண்டு ரவிதாஸனுடைய கழுத்தை இரண்டு கைகளாலும் நெறிக்கத் தொடங்கினார்.

ஆனால் தேவராளன் சும்மா இருக்கவில்லை. அவனுடைய இடுப்பில் செருகியிருந்த கத்தியைச் சிரமப்பட்டு எடுத்துத், தன்னை மிதித்துக் கொண்டிருந்த காலில் குத்தப் பார்த்தான். பழுவேட்டரையர் அதை அறிந்து கொண்டார். இன்னொரு காலினால் அவனுடைய கை மணிக்கட்டை நோக்கி ஒரு பலமான உதை கொடுத்தார். கத்தி வெகு தூரத்தில் போய் விழுந்தது. தேவராளனுடைய ஒரு கையும் அற்று விழுந்து விட்டது போல் ஜீவனற்றதாயிற்று. ஆனால் அதே சமயத்தில் அவனை மிதித்திருந்த கால் சிறிது நழுவியது. தேவராளன் சட்டென்று நெளிந்து கொடுத்து வெளியே வந்து குதித்து எழுந்தான். உதைபடாத கையின் முஷ்டியினால் பழுவேட்டரையரை நோக்கிக் குத்தத் தொடங்கினான். அந்தக் குத்துக்கள் கருங்கல் பாறைச் சுவர் மீது விழுவன போலாயின. குத்திய தேவராளனுடைய கைதான் வலித்தது. அதுவும் இன்னொரு கையைப் போல் ஆகிவிடுமோ என்று தோன்றியது.

இதற்கிடையில் ரவிதாஸன் தன் கழுத்திலிருந்து பழுவேட்டரையருடைய கரங்களை விலக்கப் பெருமுயற்சி செய்தான். ஒன்றும் பலிக்கவில்லை. கிழவருடைய இரும்புப் பிடி சிறிதும் தளரவில்லை. ரவிதாஸனுடைய விழிகள் பிதுங்கத் தொடங்கின. உளறிக் குளறிக் கொண்டே "தேவராளா! சீக்கிரம்! சீக்கிரம்! கோவில் மேலே ஏறு! மண்டபத்தைக் கீழே தள்ளு!" என்றான்.

தேவராளன் உடனே பாய்ந்து சென்று பள்ளிப்படைக் கோயிலின் மேல் மண்டபத்தின் மீது ஏறினான். அங்கே மண்டபத்தின் ஒரு பகுதியில் பிளவு ஏற்பட்டு இனிச், சிறிது நகர்ந்தாலும் கீழே விழக்கூடிய நிலையில் இருந்தது. அதை முன்னமே அவர்கள் கவனித்திருந்தார்கள். ரவிதாஸன் அதைத்தான் குறிப்பிடுகிறான் என்று தேவராளன் தெரிந்து கொண்டான். மண்டபத்தின் இடிந்த பகுதியைத் தன் மிச்சமிருந்த வலிவையெல்லாம் பிரயோகித்து நகர்த்தித் தள்ளினான். அது விழும் போது அதனுடனிருந்த மரம் ஒன்றையும் சேர்த்துத் தள்ளிக் கொண்டு விழுந்தது.

பழுவேட்டரையர், மேலேயிருந்து மண்டபம் நகர்ந்து விழப் போவதைத் தெரிந்து கொண்டார். ஒரு கையை ரவிதாஸனுடைய கழுத்திலிருந்து எடுத்து மேலேயிருந்து விழும் மண்டபத்தைத் தாங்கிக் கொள்ள முயன்றார்.

ரவிதாஸன் அப்போது ஒரு பெரு முயற்சி செய்து அவருடைய பிடியிலிருந்து தப்பி அப்பால் நகர்ந்தான்.

மரமும் மண்டபமும் பழுவேட்டரையர் பேரில் விழுந்தன. பழுவேட்டரையர் தரையில் விழுந்து நினைவு இழந்தார்.

(தொடரும்)

"தலைவர், யாரோ ஒரு பொடியனுக்குப் பாராட்டு விழா, வெற்றி விழா நடத்துறாரே, யார் அது?"

"தலைவரோட பையன்தான்... எல்.கே.ஜி.ல பாஸ் பண்ணிட்டானாம்!"

— சீர்காழி ஸ்ரீராம்.



# விசுவாமித்ரர் வேடம் எதற்கு?

## —ஓர் அரசியல் அலசல்!

சிறு வயதிலிருந்து எனக்கு மிக நெருங்கிய நண்பனாக இருந்து வரும் சடகோபனுக்கு அரசியல் என்றால் அல்வா சாப்பிடுவது மாதிரி அத்தனை இஷ்டம். நாளிதழோ, வார இதழோ, ஆங்கிலமோ, தமிழோ, புதுசோ, பழசோ எதுவாயிருந்தாலும் அவற்றிலுள்ள அரசியல் செய்திகளையும், கட்டுரைகளையும் கரைத்துக் குடித்து விடுவான். எல்லா செய்திகளும் அவன் மூளையில் குடியேறி, அவனைக் கொஞ்சம் குழப்பி விடும்.

சமீபத்தில் அவனைச் சந்தித்த போது, சீனாவில் மாணவர்கள் கிளர்ச்சியை ஆட்சியாளர்கள் இரும்புக் கரம் கொண்டு முறியடித்ததைப் பற்றிப் பேச்சுக் கொடுத்தேன். சடகோபன் மிகவும் வேதனையடைந்தான்.

'பாவம், அம் மாணவர்கள் என்ன கேட்டார்கள்? நர்சரி பள்ளி தொடங்கி, மருத்துவக் கல்லூரி, இன்ஜினீயரிங் கல்லூரி வரை நிறைய மார்க் வாங்கியவர்கள் கூட அட்மிஷனுக்கு நாயாக, பேயாக அலைய வேண்டியிருக்கிறதே. டொனேஷன் என்றும், டெபாசிட் என்றும் பணத்தைப் பறிக்கிறார்களே, இதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கக் கூடாதா' என்றுதானே கேட்டார்கள். இது தவறா? இதற்காக நடுத் தெருவில் அவர்கள் மீது டாங்க்குகளைச் செலுத்திக் கொல்வதா?'' என்று கண்ணீருக்கிடையே கேட்டான் சடகோபன்.

ஆந்திராவில் வளர்ந்து வரும் நக்ஸலைட்டுகளின் வன்முறையை ஒடுக்க முதலமைச்சர் என்.டி.ஆர். ஒரு புது வழியைக் கண்டுபிடித்துள்ளாராம். அவர் விசுவாமித்திரர் வேஷம் போட்டுக் கொண்டு மலைப் பகுதிகளிலும், குகைகளிலும், காடுகளிலும் தவம் செய்வது போல் அமரப் போகிறாராம். அது தெரியாத நக்ஸலைட்டுகள், அவர் காது கேட்கும்படி தங்கள் திட்டங்களையும், அடுத்து எங்கு, யாரைத் தாக்கப் போகிறார்கள் என்ற விவரங்களையும் பேசி விடுவார்களாம். பின்னர், மீனாட்சி சேஷாத்ரி, மேனகையாக வேடம் புனைந்து, அவர் முன்னால் டான்ஸ் ஆடுவாராம். அதைக் காண, சுற்று வட்டாரத்தில் இருக்கும் நக்ஸலைட்டுகள் அத்தனை பேரும் கூடிவிடுவார்களாம்! மேனகையை நெருங்குவது போல், அவள் கழுத்தில் தொங்கும் மைக்கில் என்.டி.ஆர். எல்லா விவரங்களையும் ஐ.ஜி.க்கு கூறி விடுவார். சற்றைக்கெல்லாம் காவல் துறையினர், நான்கு பக்கங்களிலிருந்தும் பாய்ந்து வந்து நக்ஸலைட்டுகளை ஒட்டு மொத்தமாகக் கைது செய்து, நிராயுதபாணிகளாக்கி, தெலுங்கு கங்காவுக்கு வாய்க்கால் வெட்டும் பணியில் ஈடுபடுத்தி விடப் போகிறார்களாம்! இதெல்லாம் தெரியாத பிரதம மந்திரி, 'சட்டம் ஒழுங்கு குலைந்து கொண்டு வரும் போது, என்.டி.ஆர். மேனகையுடன் டான்ஸ் ஆடப் போகிறாராம் என்று கேலி பேசியிருக்கிறார். அவருக்கு அனுபவம் போதாது என்று அங்கலாய்த்துக் கொண்டான் சடகோபன்.

எதிர்க் கட்சிகளிடையே அநேகமாக எல்லா பிரச்னைகளிலுமே உடன்பாடு ஏற்பட்டு, யார் யாருக்கு எந்த எந்தத் தொகுதி என்றும் முடிவாகி விட்டதாம். அவர்களிடையே நிலவும் ஒரே கருத்து வேறுபாடு, அடுத்த பிரதம மந்திரி யார் என்பதைப் பற்றியதுதான். எதிர்க்கட்சிக் கூட்டணி வெற்றி பெற்றுப் பதவிக்கு வந்த மறுநாளே, இந்தியாவுக்கு ஒரு பிரதம மந்திரிக்குப் பதிலாக ஜனாதிபதி ஐந்து பிரதம மந்திரிகள் நியமிக்க வேண்டும் என்று அரசியல் சட்டத்தைத் திருத்தப் போகிறார்களாம். தற்போது, எல்.கே. அத்வானி, தேவிலால், மதுதண்டவதே சந்திரசேகர், வி.பி. சிங், ஹெக்டே, என்.டி. ராமராவ், அருண் நேரு, அஜீத்சிங் இவர்களில் யார் பிரதம மந்திரியாவது என்பதில்தான் சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. அது முடிவு செய்யப்பட்டு விட்டால், தேர்தலுக்குப் பிறகு இதர நான்கு பிரதம மந்திரிகள் யார் என்பதைப் பற்றி முடிவு செய்து கொள்ளலாம் என்று ஒரு சமரச யோசனையின் மீதுதான் தற்போது ரகசியப் பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வருகின்றன. அத்தனை பத்திரிகைகளையும் படித்து விட்டுத் தான் இந்த முடிவுக்கு வந்திருப்பதாக சடகோபன் அடித்துக் கூறினான்.

யார் கண்டது, ஒருவேளை சடகோபன் கூறுவதெல்லாம் உண்மையில் நடந்தாலும் நடந்து விடலாம்! இந்தியாவில் நிலவும் அரசியல் குழப்பங்கள், சடகோபனின் மூளையில் உள்ள அரசியல் குழப்பங்களுக்குச் சற்றும் குறைந்து போய் விடவில்லையே!




**மெரீனா**




பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் கொலைக்குற்றம் சாட்டப்பட்டு ஆயுள் கைதியான தந்தை. வக்கீலுக்குப் படித்த பிள்ளையாண்டான். என்றோ மூடுவிழா நடந்து விட்ட சட்டத்தின் வாசலுக்குத் திறப்பு விழா நடத்தித் தன் தந்தை நிரபராதி என்று நிரூபிக்கிறான். உண்மைக் குற்றவாளியை ஆதாரத்துடன் அடையாளம் காட்டுகிறான்.

தன் தந்தை கொலைக் குற்றத்துக்காக ஆயுள் தண்டனை அனுபவிக்கிறவர்; விமான விபத்தில் இறந்ததாய்ப் பொய்த் தகவல் கொடுத்திருக்கிறார் வளர்ப்புத் தந்தையான பாதிரி ஏ. ஆர். எஸ். என்று தெரிய வரும்போது, வெடித்த வேதனையை வெளியிட்டுப் பொருமும் கட்டத்தில் கார்த்திக்காகட்டும்; அந்த வேதனையில் பங்கு பற்றி 'ஒரு கொலைக் கைதியின் பிள்ளை என்ற குற்ற உணர்வின்றி நீ நன்றாகப் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்று தான் அந்த உண்மையைச் சொல்லவில்லை.' என்று ஏ.ஆர்.எஸ். உருகுவதிலாகட்டும் இருவருமே நெஞ்சைத் தொடுகிறார்கள்.

என்னமோ தெரியவில்லை, ஷோபனாவுடன் கிளுகிளுக்கும் கட்டங்களில் ஏதோ சொல்கிறீர், செய்கிறேன் என்கிற மாதிரி இருக்கிறதே தவிர, கார்த்திக்கிடம் அத்தனை ஒட்டுதலைக் காண முடியவில்லை. அந்தப் பிணைப்பை விடக் குயிலியிடம் கொஞ்சம் தேவலாம் போலிருக்கிறது.

ஷோபனாவின் முழிப்பும் சிரிப்பும், 'இத பாருங்க, நடிக்கிறேன், நடிக்கிறேன்,' என்று சொல்கிற மாதிரியே தெரிவது வழக்கம். இருந்தாலும் நீதித் தராசு பத்திரிகை அலுவலகத்தில் புகுந்து இந்தண்டை ஆசிரியர் சுமித்ரா, அந்தண்டை கார்த்திக் இருக்க அவர்களையே பார்த்துக் கொண்டு மகா உற்சாகத்துடன், 'அந்தப் பப்ளிக் ப்ராஸிக்யூட்டர் எத்திராஜைக் கிழிகிழின்னு கிழிச்சு ஒரு கட்டுரை எழுதிக் கொண்டு வந்திருக்கேன். படிக்கிறேன், கேளுங்க' என்று பிரிக்க, இருவரும் திணறி, 'பின்னாலே பார்க்கலாம்' என்று எச்சரிக்க, 'பின்னாலே பார்க்கிற வழக்கம் எங்க பரம்பரைக்கே கிடையாது.'' என்று அவர் மேற்கொண்டு படிக்க, அவர் கட்டுரையில் கிழிபடும் அவரது தகப்பனார் ரவிச்சந்திரன் பின்னாலிருந்து கேட்டுப் பொருமு — ரசிக்க ஒரு கட்டம்.

பத்திரிகை ஆசிரியர் என்றால் வெற்றிலைச் செல்லத்தோடு இருக்கணும் என்று ஒரு மூடப் பழக்கத்தை ஏற்படுத்திவிட்ட புண்ணியவான் யாரோ? இருக்கட்டும். அதற்காகப் புகழுக்கு மயங்காத உண்மை விளம்பிப் பத்திரிகாசிரியரான சுமித்ராவும் சதா அப்படி இருக்க வேண்டுமா? அவரது சாதனையை ஊர் புகழ்கிறதே தவிர, நாமாய்த் தெரிந்து கொள்கிற மாதிரி ஏதும் நடக்கவில்லை.

இந்த ஹரே கிருஷ்ணா சமாசாரத்தில் கதாசிரிய டைரக்டருக்கு என்ன வன்மமோ தெரியவில்லை. கொலைகாரரை அதனோடு சம்பந்தப்பட்டவராக்கியிருக்க வேண்டாம். ரொம்ப நாளைக்கப்புறம் வந்தாலும் ராஜேஷ் படு பாந்தம்.

ஆயிரம்தான் சொல்லுங்கள். இந்த ராஜேஷ், அந்தச் சுமித்ரா, நடுவிலே உருட்டும் மேஜர் சுந்தரராஜன் — இப்படித் திரையுலகப் பூர்வாளையெல்லாம் தரிசிக்கிற போது ஏதோ விட்டுப் போன சொந்தம் ஒட்டிக் கொண்ட இதம் தெரிகிறது.

நீளமான கோர்ட் சீனில் ஒலிப் பதிவு மக்கர் செய்து கொஞ்சம் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறது.

கதையமைப்பு ரொம்பத்தான் புத்தி பூர்வமாய் இருப்பதால்தானோ என்னவோ, ஒருவித இறுக்கம் நிலவுகிறது. வாய்விட்டுச் சிரிக்கும் சந்தர்ப்பங்கள் பாலைவனச் சோலைதான்.

— பி. எஸ். எஸ்.

# ஆள் பிடிக்கிறார்கள்

அந்த அரசு மகப்பேறு மருத்துவமனை கூட்டத்தால் நிரம்பி வழிந்தது.

மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க, மஞ்சள் நிறக் கைப்பையுடன் ஒரு கிழவி பின்தொடர, இடுப்பில் தன் ஒன்றரை வயதுக் குழந்தையுடன், 'என்கொயரி' கவுண்டர் முன் வந்து நின்றாள் அந்த நிறைமாதக் கர்ப்பிணிப் பெண்.

நீண்ட தூரம் நடந்து வந்ததற்கடையாளமாக அவளின் முகமெல்லாம் முத்து முத்தாக வியர்வை. இடுப்பில் இருந்த குழந்தையைத் தன்னுடன் வந்த வயதான அம்மாவிடம் கொடுத்து விட்டு, தன் கையில் கசங்கிச் சுருண்டிருந்த பழுப்பு நிறக் காகிதத்தை விரித்துப் பிடித்து 'என்கொயரியில்' நீட்டினாள்.

'என்கொயரி'யில் வீற்றிருந்த கண்ணாடி அணிந்த நடுத்தர வயதுப் பெண்மணி அதுவரை இவளை நிமிர்ந்து கூடப் பார்க்காமல் ஏதோ ஃபைலில் மூழ்கியிருந்தவள் தன் முன்னே ஒரு காகிதம் நீட்டப்படுவதை உணர்ந்ததும் —

''என்னம்மா?'' — நிமிர்ந்தவள் எரிச்சலுடன் கேட்டாள்.

''அம்மா, எனக்கு இது 'மாசம்...!' இப்பவோ; பிறகோன்னு இருக்குங்க. இன்னைக்கு வா அட்மிட்டு பண்ணிக்கறேன்னு டாக்டரம்மா ஒரு வாரம் முன்னமே டெஸ்ட்டுப் பண்ணிட்டுச் சொல்லியனுப்பினாங்க. அதுதான்... இன்னைக்கு...!''

''சரி... சரி... உண்டியல்ல ஒரு ரூபாய் காணிக்கை போடு...!''

இதை ஏற்கெனவே எதிர்பார்த்தவள் போல் அந்தக் கர்ப்பிணிப் பெண் தயாராக வைத்திருந்த ஒரு ரூபாய் நாணயத்தை என்கொயரி டேபிளில் இருந்த பழைய தகர டப்பாவில் போட்டு விட்டு நிமிர்ந்தாள்.

''என்னம்மா... இன்னைக்கு உன்னை அட்மிட் பண்ண முடியாது போலிருக்கே...! எல்லா 'பெட்'லேயும் பேஷண்ட்ஸ் நிரம்பிக் கிடக்கிறாங்க..! அதனால டாக்டரம்மா வந்தவுடனே உன்னைப் 'பெரியாஸ்பத்திரி' அனுப்பிடுவாங்கன்னு நினைக்கிறேன்...''

— 'என்கொயரி'ப் பெண் அலட்சியமாய்ச் சொன்னாள். அதுவரை அமைதியாய் நின்ற கிழவி இந்த வார்த்தைகளினால் சட்டென்று கலவரமடைந்தாள்.

''அய்யய்யோ... என்னம்மா சொல்றீங்க... பெரிய ஆஸ்பத்திரிக்கா? அது இங்கிருந்து பத்து மைல் போவுணுமே. ஆத்தாடி, அவ்வளவு தூரம் யாரால ஆகும்? அம்மா... அம்மா... நாங்க முதல்லேயே அஞ்சு மைல் தூரத்துக்கப்பாலிருந்து வர்றோம். இன்னும் நீங்க பத்து மைல் தூரம் அனுப்பினா.. அதுவும் டவுன்ல.. எங்களால தாங்க முடியாதும்மா...! போக வர ஏதாவது ஆயிட்டா கிழவி நான் என்ன செய்வேன்? அதனால, டாக்டரம்மாகிட்டே எப்படியாவது எடுத்துச் சொல்லி இங்கேயே 'பெட்' கொடுக்கச் சொல்லுங்கம்மா. உங்களுக்குப் புண்ணியமாப் போகும்...!''

— மிரட்சி மேலோங்கப் பரிதவிப்புடன் அந்த மூதாட்டி சொல்ல, கர்ப்பிணிப் பெண்ணும் பரிதாபமாய் 'என்கொயரி'யைப் பார்த்தாள்.

''அதுக்கு நான் என்னம்மா செய்யட்டும்...? முதல்லேயே இங்கே ஏகப்பட்ட பிரசவ கேஸ் க்யூ வுல காத்துட்டிருக்கு. உங்களைப் போலத்தான் அவங்களும். அதுக்கெல்லாம் என்ன வழி பண்றதுன்னு தெரியாம முழிச்சிட்டிருக்கோம்! சரி, சரி.. ஒண்ணு செய்யுங்க. அங்கே நிற்கிறாரே பியூன்.. அவரைப் போய்க் 'கவனிச்சீங்கன்னா' கம்பவுண்டர்கிட்டே கூட்டிட்டுப் போவாரு.. அப்புறம் உனக்கு 'அட்மிஷன்' கிடைச்சாலும் கிடைக்கும்...!''

அவளின் 'கவனி' என்ற வார்த்தையின் அழுத்தத்தைப் புரிந்து கொள்ள முடியாத அந்தக் கிராமத்துப் பெண்கள் இருவரும் அவளிடமிருந்த பழுப்பு நிறக் காகிதத்தைத் திரும்ப வாங்கிக் கொண்டு, பேஷண்டுகளை அதிகாரம் செய்து கொண்டிருந்த ப்யூனை நெருங்கி 'கவனிக்காமல்' கவனிக்க, அவர்களை ஏற இறங்கப் பார்த்த ப்யூன் முறைத்தான்.

''என்னம்மா... என்ன..? உனக்கு மட்டும் ஸ்பெஷலா சொல்லணுமா...? இத்தனை பேர் 'க்யூவுல' உட்கார்ந்திருக்கிறது தெரியலை..? போ.. போ... போய் வரிசைக் கடைசியில உட்கார். போ... அட போம்மான்னா...!''

— அவன் விரட்டியடித்தான்.

''ஐயா... நாங்க அஞ்சு மைல் அப்பால இருக்கிற அனுமந்தபுரத்துலயிருந்து வர்றோம். அதோ... 'முன்னால' உட்கார்ந்திருக்கிற கண்ணாடி போட்ட அம்மா உங்களைப் பிடிச்சா இங்கேயே 'பெட்'டுக்கு ஏற்பாடு பண்ணித் தருவீங்கன்னு...!''

— கிழவி இழுத்தாள்.

''ஏம்மா... காலையில வந்து என் பிராணனை வாங்கறீங்க..? எல்லா 'பெட்'லே

கா.அ.வேலாயுதன்

யும் ஆபரேஷன் கேஸாக நிறைஞ்சு கிடக்கு. எதுக்கும் டாக்டர் வரட்டும் போய் வரிசையில உட்காரு...!''

அவன் மேலும் விரட்டியடித்தான். இருவரும் வேறு வழி தோன்றாது வரிசைக் கடைசியில் சென்று அமர்ந்தனர்.

நேரம் நகர்ந்து கொண்டிருக்க, பக்கத்திலிருந்த பெண் ஒருத்தி இவளிடம் பேச்சுக் கொடுத்தாள்.

''ஏம்மா... இது உனக்கு ரெண்டாவது குழந்தையா...?''

''ஆமாமம்மா...!''

''முதல் குழந்தை பையனா...?''

''இல்லைங்க... பொட்டைப் புள்ளைங்க...!'' — அவளுடைய அம்மா சொன்னாள்.

''உன் புருஷன் எங்கே வேலைக்குப் போறாரு...?''

''அது என்ன வயக்காட்டுல வெறும் கூலி வேலைக்குப் போவுதும்மா... ம்.. கஷ்ட ஜீவனம்தான்...!''

''த்சொ... த்சொ...'' — சட்டென்று பரிதாபப்பட்ட அந்தப் பெண்மணி,

''கஷ்ட ஜீவனம்ங்கறே.. புள்ளைகளை அளவாப் பெத்துக்கம்மா... யார் என்ன சொன்னாலும் கஷ்டப்படப் போறது நாமதானே? இந்தத் தடவை பையன் பிறந்தா ஆபரேஷன் பண்ணிடு. அப்பத்தான் இப்ப விற்கிற விலைவாசிக்கும்; கூலிக்காரன் பிழைப்புக்கும் சரிப்பட்டு வரும்...!''

— அவள் பெரிய பிரசங்கமே செய்ய ஆரம்பித்து விட்டாள். அவள் அப்படி பிரசங்கம் செய்த அதே சமயத்தில்,

சற்று தூரத்தில் நான்கைந்து 'மெட்டர்னிட்டி நர்ஸிங் அஸிஸ்டெண்ட்'கள் ஏதோ பேசிக் கொண்டே வந்தனர்.





"அடிக்கடி என்னோட சண்டை போட்டுக்கிட்டுத் தன்னோட பிறந்த வீட்டுக்குப் போற என் மனைவி இந்தத் தடவை ஒரு படி மேலேயே போயிட்டா."

"என்ன செஞ்சா?"

"என்னை என்னோட பிறந்த வீட்டுக்குத் துரத்திட்டா."

— வி. கிருஷ்ணகுமார்.



"L.K.G., U.K.G.ன்னு ஏன் சொல்றாங்க?"

"பசங்க கிலோ கணக்கில் புத்தகங்கள் தூக்கறதால்தான்!"

— கிழை. அ. கதிர்வேல்.



"பையனின் தந்தை அ ர சி ய ல் தலைவரா?"

"எப்படிக் கண்டுபிடிச்சே?"

"வரதட்சிணை வாங்காமல் மகனுக்குக் கல்யாணம் பண்ணறதை 'இலவச மாப்பிள்ளை'த் திட்டம் என்று அறிவித்திருக்கிறாரே!"

— லலிதா செல்லப்பா.

"இன்னைக்கு வந்திருக்கிற 'கேஸ்ல' மட்டும் ஏழு பேர் நான் புடிச்சதாக்கும் சுசீலா.. டாக்டர் என்னை ரொம்பப் பாராட்டினாங்க...!"

"எப்படி உன்னால மாசா மாசம் இவ்வளவு பிடிக்க முடியுது...? நான் வெறும் மூணுதான். அது புடிக்கிறதுக்குள்ளேயே காலும், கண்ணும் திருகிடுது. ம்.. எப்படியோ இந்த மாசம் 'மெமோ' வாங்காம தப்பிச்சேனே.. அதுவே என்னோட புண்ணியம்...!"

"ம்.. உங்களுக்கென்னப்பா... அங்கங்கே டாக்டர்ஸ் சப்போர்ட் இருக்கு... சமாளிச்சுடறீங்க.. ஆனா நான்.. மாதக் கடைசியாகியும் இன்னும் ஒரு கேஸ் கூடப் பிடிக்கலை... டாக்டர் என்ன சொல்லப் போறாரோ...? என்ன செய்யறதுன்னே ஒண்ணும் புரியலை...!"

— இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு அந்தக் கிராமத்துப் பெண்ணைக் கடப்பதற்கும், அவள் நாவிலிருந்து,

"பையன் பிறந்தா என்ன...? பொண்ணுப் பொறந்தா என்ன... இந்தத் தடவை கண்டிப்பா ஆபரேஷன் செய்துக்கணும்மா. போன ஒரு குழந்தையோடவே என் வீட்டுக்காரர் செய்துக்கச் சொன்னார். ஆனா நான்தான் மாட்டேன்னுட்டேன்...!"

— என்ற வார்த்தைகளை பக்கத்துப் பெண்ணிடம் உதிர்ப்பதற்கும் நேரம் சரியாக இருந்தது. இவர்கள் சம்பாஷணையைக் கேட்ட மாத்திரத்தில் போய்க் கொண்டிருந்த நான்கு நர்சுகளும் ஒரு சேரத் திரும்பினர்.

அவ்வளவுதான் —

ஒருவருக்கொருவர் 'நான் முந்தி; நீ முந்தி' என்று அடித்துப் பிடித்துக் கொண்டு இவளை நோக்கி ஓடி வர, இந்தப் பெண் அரண்டு போய் எழுந்து நின்றாள்.

"ஏம்மா உம்பேரு பரமேஸ்வரிதானே.. இரண்டு நாளைக்கு முன்னால கூட டெஸ்ட் பண்ணிட்டுப் போனப்ப டாக்டர்கிட்டே சிபாரிசு செஞ்சு டானிக்கெல்லாம் எழுதிக் கொடுத்தேனே ஞாபகம் இல்லையா...?' — ஒருத்தி அவள் மேல் விழாத குறையாகக் கேட்க —

"இல்லைங்க... எம்பேரு பார்வதிங்க...!"

"ஆங்... அதுதான்...!"

"பொய் சொல்லாதே சுசீலா... இந்தப் பார்வதியை எனக்கு முன்னமே தெரியும். எங்க வீட்டுப் பக்கத்துலதான் குடியிருக்கா. நான் ஏற்கெனவே சொல்லி வச்ச கேஸு... ஏன் பார்வதி.. என்னைத் தெரியலை...?" — மற்றொருத்தி அவளை மேலே பேசவொட்டாது கையைப் பிடித்து இழுக்க —

"ஒரேயடியா ரெண்டு பேரும் புளுகாதீங்க.. இது உண்மையிலேயே ஆஸ்பத்திரிக்கு வந்த கேஸு. யாருமே தனியாப் போய்ப் பிடிச்சுட்டு வரலை. அதனால இது எனக்குத்தான் சேரணும்...!" — ஒய்யாரக் கொண்டைக்காரி ஒருத்தி குரலை உயர்த்த —

"ஏப்பா... ஏப்பா.. நீங்கதான் இந்த

உங்களுக்காகவே!





**அழகு மிளிரும்
அடர்த்தியான
கூந்தலுக்கு**

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குண

## கூந்தல் தைலம்

தலைமயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலைமயிர் நீண்டு, கறுத்து, அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு, பொடுகு, தலையில் சொறிந்தால் செதில் உதிர்தல் குணமாகும். பெண்கள் ஆண்கள் விரும்பி உபயோகிக்கின்றனர்., அனைவருக்கும் உகந்தது.

MAYUR

தேவைக்கு எழுதவும்

**நவசக்தி வைத்தியசாலை**

தபால் பெட்டி எண். 7, சேலம் 636 001.

இப்பொழுது எல்லா மருந்துக் கடைகளிலும் மற்றும் மளிகை, ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

1 பாட்டில் விலை ரூ. 16.25. V.P.P. உண்டு. தபால் செலவு தனி.

**மிருதுவான, தரத்தில் சிறந்த
கலர் மாறாத, நியாயமான விலையிலே
P.R.C. கார்மெண்ட்ஸ் லில்லி பாவாடைகள்
உங்கள் இல்லம் தேடி வருகிறது.**




நீங்கள் செய்யவேண்டியது இதுவே.

உங்களுக்கு விருப்பமான கலர் மற்றும் உங்கள் சரியான அளவை எமக்குத் தெரிவிக்கவும் (முடிந்தால் கலர் கட்டிங் அனுப்பவும் ).

ஒவ்வொன்றும் ரூ. 40/- மதிப்புள்ள, 6 பாவாடைகள், ரூ. 200/- விருப்பமான டிசைன்களில், பலவித வண்ணங்களில் உங்கள் இல்லம் தேடி வருகிறது. ரூ. 200/க்கு PRC கார்மெண்ட்ஸ் என்ற பெயருக்கு D.D அல்லது M.O மூலமாகவோ அனுப்புங்கள். மணியார்டர் அனுப்பினால் கடிதத்தில் கலர் கட்டிங் டிசைன் எண் குறிப்பிட தவறாதீர்கள்.

V.P.Pம் உண்டு, தபால் செலவு இலவசம். உங்களுக்கு விருப்பமான கலர் கிடைக்காவிடினும் நீங்கள் திருப்தியடையும் கலர் நிச்சயம். PRC லில்லி பாவாடைகள் விலையில் நியாயமானது, தரத்தில் சிறந்தது. ஸ்பெஷல் அளவு (இடுப்பு அளவு 36"க்குமேல்) 6 பாவாடைகள் ரூ. 230/- விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.

இது ஒரு சுயவேலை வாய்ப்பு நிறுவனம். பாரதப் பிரதமர் அவர்களின் "படித்த இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்பு"த் திட்டத்தின் கீழ், கரூர் கிளை ''கனரா வங்கியின்'' சீரிய பொருளாதார உதவியுடன், மிகச்சிறப்பாக செயல்படும் நிறுவனங்களில் ஒன்றாகும்.

**P.R.C. கார்மெண்ட்ஸ்**

நெ. 26, பிரதட்சணம் ரோடு, A Plot, கரூர்-639 002.
போன் : 21946

மாசக் கோட்டாவைச் சரிக்கட்டிட்டீங்களே... அதனால இதை எனக்கு விட்டுக் கொடுங்கப்பா...!'' ஒருத்தி கெஞ்சினாள்.

இவர்களை இதுவரை பார்த்தே அறியாத அந்தப் பார்வதி விழிக்க, இவர்களுக்குள் நடந்த போராட்டத்தின் இரைச்சலைக் கேட்டு என்கொயரியில் உட்கார்ந்திருந்த பெண்ணும் அதிகாரம் செய்து கொண்டிருந்த பியூனும் அங்கே ஓடி வந்தனர். வந்தவர்கள் விஷயத்தைக் கிரஹித்துக் கொண்டதும் —

''சும்மா ஒரேயடியா உங்களுதுன்னு உரிமை கொண்டாடாதீங்க...! இந்தப் பொண்ணு போன வாரமே எனக்கு அறிமுகமான கேஸு... அதனால இந்தக் கேஸ் எனக்குத்தான் சேரணும்...!''

— சற்றுமுன் சிடுசிடுத்த என்கொயரி வாயெல்லாம் பல்லானாள்.

''தோ பாரும்மா... பார்த்தா பட்டிக்காடு போலயிருக்கே... இவங்க பேச்சை நம்பி னே, ஆபரேஷன் ஆன பின்னால ஒருத்தரும் கண்டுக்க மாட்டாங்க. உனக்கு... நான் உடனே 'பெட்'டுக்கு அதுவும் ஸ்பெஷல் வார்டுல ஏற்பாடு பண்ணித் தர்றேன். நீ எதுக்கும் கவலைப படாதே. ஆனா.. 'டாக்டர்கிட்டே உன்னை நான்தான் கூட்டிட்டு வந்ததாச் சொல்லும் போது மட்டும் தலையை ஆட்டு போதும்...!''

— பக்கத்தில் நின்றிருந்த பியூன் அவள் காதுக்கருகில் வந்து கரகரத் தொண்டையில் கிசுகிசுத்தான்.

''ஏம்பா பரமசிவம்... உங்களுக்கு எதுக்கு இந்த அல்ப ஆசை...? இந்தக் 'கேஸ்' பிடிக்கறதே எங்க வேலை... இதுல நீங்க ஏன் நுழைஞ்சு குழப்பம் பண்றீங்க...? கேவலம் ஏதோ கொஞ்சம் 'கமிஷன்' கிடைக்கும். இதுக்குப் போய் அலையறீங்களே...! ஆனா எங்களுக்கு 'கேஸ்' பிடிக்காட்டா வேலையே போயிடும். ப்ளீஸ்... இந்தக் கேஸை மட்டுமாவது எனக்கு விட்டுக் கொடுங்களேன்...!''

— ஒரு நர்ஸ் இவர்களிடமும் கெஞ்சினாள்.

''அதெல்லாம் முடியாது...! நாங்க ஏன் விட்டுக் கொடுக்கணும்... ஆஸ்பத்திரிக்கு வர்ற கேஸு எல்லாம் எங்களுக்குத்தான் சேரும்... தெரியுமில்லே...?''

— பியூனும், என்கொயரியும் சேர்ந்து கொண்டனர்.

அப்போது —

கழுத்தில் ஸ்டெதாஸ்கோப் தவழ, முகத்தில் புன்முறுவல் பூக்க, அந்த லேடி டாக்டர் ஹாலுக்குள் நுழைந்தாள். வந்ததும் வராததுமாக ஒருசேர நின்றிருந்த இவர்களின் நிலையைக் கண்டு ஓரளவு யூகித்துக் கொண்டாள் போலும்!

''என்ன பங்கஜம்... அவரவர் இடத்தை விட்டு விட்டு வந்து எல்லோரும் இங்கே என்ன செய்யறீங்க...?''

— குரலில் கொஞ்சம் காரத்தைத் தேக்கி வைத்துக் கொண்டு கேட்டாள். பியூன் நைசாக அந்த இடத்தை விட்டு நழுவினான்.

''மேடம்... இந்தக் கேஸு... எனக்குப் பக்கத்து வீடு.. எனக்குச் சேர வேண்டியது... ஆனா... இவங்க எல்லோரும் நான் பிடிச்சேன்னு...'' — என்று ஒருத்தி இழுத்தாள்.

அந்தக் கர்ப்பிணிப் பெண்ணும், கிழவியும் அவர்களுக்கு மத்தியில் விழித்துக் கொண்டிருக்க அவர்களை ஏற இறங்கப் பார்த்த டாக்டர், அவர்களின் நிலையை ஊகித்துக் கொண்டவள் போல் கோபமாய்க் கத்தினாள்.

''எல்லோரும் என்ன விளையாடறீங்களா...? இந்தப் பொண்ணு ஒரு வாரம் முன்னாடி வந்து ட்ரீட்மெண்ட் எடுத்தப்ப ஒருத்தரும் இவளைக் கண்டுக்கல. இப்ப இது 'கேஸு'ன்னு தெரிஞ்சவுடனே எல்லாத்தையும் எறிஞ்சுட்டு ஓடி வந்துட்டீங்களா... போங்க.. போங்க...!''

எல்லோரும் ஏதோ முணுமுணுத்தபடி அங்கிருந்து அகன்றனர்.

''நீ வாம்மா....!''

எத்தனையோ பேஷண்டுகள் அவளுக்கு முன்னமே காத்திருக்க டாக்டர் இவளை மட்டும் தன் அறைக்கு அழைத்துச் சென்று ஸ்பெஷலாகக் கவனித்தாள். அவளுக்கு உடனடியாக 'அட்மிஷன்' ஆர்டர் எழுதி விட்டு, டேபிளிலிருந்த ஃபோனை நகர்த்தி ரிஸீவரைக் கையிலெடுத்தாள்.

''ஹலோ... பசவங்கரை மெட்டர்னிட்டி நர்ஸிங்ஹோம்...? நான் டாக்டர் கமலா பேசறேன். அங்கே நர்ஸிங் அஸிஸ்டெண்ட் ஷீலா... ஆங்... அவளைப் பேசச் சொல்லுங்க...!''

''ஹாய் ஷீலா... உனக்கு ஒரு குட் நியூஸ்.. போன மாசமே 'கேஸ்' கிடைக்கலேன்னு 'மெமோ' வாங்கினதாப் புலம்பிக்கிட்டு இருந்தியே...! இப்ப நான் உன் பேர்ல ஒரு 'கேஸ்' ஏற்பாடு செய்திருக்கேன்... ம்... ஆமா... உடனே வர்றியா.. ஓ.கே.!'' — என்று உற்சாகமாகப் பேசி விட்டு ஃபோனை வைத்தாள்.

---

''ஆபரேஷன் தியேட்டரில் டாக்டர் கத்தியைக் கையில் எடுத்தவுடன் 'வீர வேல்' 'வெற்றி வேல்'ன்னு உணர்ச்சிவசப்பட்டுக் கத்தறாரே?''

''சரித்திரக் கதைகள் நிறையப் படிச்சு அதிலேயே லயிச்சுப் போனவராச்சே!''

— லலிதா செல்லப்பா.



# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

ஆகவே நானும்
விவேகானந்தா கல்வி
நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே, இப்பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப படிவத்தையும்
கீழ்கண்ட எனது
முகவரிக்கு உடனே அனுப்பவும்

முகவரி:
R. சுதாகர்
30, ஆறுமுகம் பிள்ளை சந்து
வடக்கு ஆவணி மூல வீதி
மதுரை - 625006

WRITE PIN CODE IN ADDRESS




To
விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
No 9, மேட்லி ரோடு
தி. நகர்
சென்னை
पिन PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத்திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடையாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண்டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதிலளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டு போதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்கமின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத்திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல்களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

26

சக

அன்று படுக்கையை விட்டு எழுந்த வுடனே கிருஷ்ணமூர்த்திக்கு ஒரு தகவல் சொல்லப்பட்டது. சின்னமனூரில் இருந்து ஓர் இளைஞன் அவனைப் பார்க்க வந்திருந் தான். முகத்தை மட்டும் கழுவிக் கொண்டு இரவு உடையுடனே கீழே இறங்கி வந்தான்.

கதர் நாலு முழ வேட்டியும், கதர்ச் சட்டையுமாக, எளிய குடும்பத்தைச் சேர்ந் தவன் என்று பார்த்த மாத்திரத்தில் சொல் லும்படி அந்த இளைஞன் இருந்தான். கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்ததும் கும்பிட் டான்.

''உட்கார்...''

அவன் நின்றிருந்தான்.

''என்ன விஷயம்?''

அவன் சென்னையில் ஒரு கல்லூரியில் சேர வந்திருந்தான். எம். காமில் அவன் சேர வேண்டியிருந்தது. கிருஷ்ணமூர்த்தி சிபாரிசு செய்து அவனைச் சேர்த்துவிட வேண்டும்.

''என்னை உனக்கு எப்படித் தெரியும்?''

அவன் மாமாவின் பேரைச் சொன் னான். அவர்தான் அவனைக் கிருஷ்ண மூர்த்தியிடம் அனுப்பியிருந்தார். அதைக் கேட்கச் சங்கடமாக இருந்தது. உட்கார்ந்த இடத்தில், போனில், பெரிய பட்டியலை வைத்துக் கொண்டு படித்துக் கொண்டே வருவார் மாமா. அத்தனை கல்லூரி, பள்ளி களிலும் இடம் வாங்கிக் கொடுப்பார் அவர். அந்த மாமா இப்போது தன்னிடம் ஒரு மாணவனை அனுப்பி வைத்தி ருந்தார். சக்கரம் திரும்புவது என்பது இது தான் போலும்!



# போகத் தீவுகள்

''என், சொந்த ஊரில் இருந்து படிக்கலாமே, நீ?''

''வீட்டில் நான் படிப்பதை விரும்பவில்லை. உடன் வேலை பார்க்கச் சொல்கிறார்கள். இங்கு என் சித்தப்பா இருக்கிறார். அவர் என்னைப் படிக்க வைப்பார்,'' என்றவன் தொடர்ந்து சொன்னான்:

''எனக்குப் படிக்க ஆசை சார். பி.காமுக்கு என்ன வேலை கிடைக்கப் போகிறது உடனடியாய்? எம். காம். படித்தாலாவது எம். பில். பண்ணலாம். பி. எச்.டி. பண்ணலாம். என் ஆசை கல்லூரி ஆசிரியராவது. எப்படியாவது எனக்கு நீங்கள் ஓர் இடம் வாங்கிக் கொடுக்க வேண்டும்.''

அவன் அழுதுவிடுவான் போல் இருந்தது.

கிருஷ்ணமூர்த்தி, அவன் பெயர் மற்றும் இதர குறிப்புக்களை எழுதித் தரச் சொன்னான். வாங்கி, அவன் அறிந்த, தலைவருக்கு மிக நெருக்கமாக இருக்கிற ஒரு கல்லூரி முதல்வருக்குப் போன் செய்தான். அவர் வீட்டில் இருந்தார்.

''வணக்கம். நான் கிருஷ்ணமூர்த்தி.''

''எந்த கிருஷ்ணமூர்த்தி?''

அவன் தன்னைச் சொல்லிக் கொண்டான்.

''அடடே.... நீங்களா சார்... எப்படி இருக்கிறீர்கள்? சௌக்கியமா?''

''இருக்கேன்.''

''தலைவர் நல்லா இருக்கிறாரா?''

''நல்லா இருக்கார்.

''சொல்லுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்?

கிருஷ்ணமூர்த்தி தன் தேவையைச் சொன்னான்.

''சீட் விஷயமா? ம்... நான் யோசிக்க வேண்டும்...''

''ஏன்?''

''கொஞ்சம் தாமதமாகச் சொல்லியிருக்கிறீர்கள். இடங்கள் நிரம்பி விட்டன. உங்களுக்கு மறுப்புச் சொல்லவும் முடியவில்லை. ஒரு காரியம் செய்யுங்கள். அந்த அம்மா

பிரபஞ்சன்



யைக் கேட்டுப் பாருங்கள்.''

''எந்த அம்மாவை?''

''அதான் சார்.. விநோதினி அம்மாவை. அந்த அம்மா ரெண்டு சீட் கேட்டிருந்தாங்க. ஒன்று கொடுத்தாச்சு. ஒன்று ரிசர்வ்லே வையுங்க. அப்படின்னு சொல்லியிருக்காங்க... நீங்க அவங்களோடு பேசுங்க... அவங்க சம்மதிச்சா, நான் ஓர் இடம் கொடுக்கத் தயார்.''

கிருஷ்ணமூர்த்தி தயக்கத்தோடு பேசினான்.

''சரி... நான் பேசிவிட்டுப் போன் செய்கிறேன்'' என்றபடி போனை வைத்த கிருஷ்ணமூர்த்தி. அந்த இளைஞனிடம் சொன்னான்:

''நாளை என்னை வந்து பார். ஏதாவது ஏற்பாடு செய்கிறேன்.''

அந்த இளைஞன் புறப்பட்டுப் போனான்.

கிருஷ்ணமூர்த்தி அப்படியே பிரமை பிடித்து அமர்ந்திருந்தான். இதென்ன, சக்கரம் மீண்டும் திரும்புகிறதா? அவன் மிகவும் சுழிவிரக்கத்தோடு பல கணங்கள் அமர்ந்திருந்தான். பிறகு அந்த அலுப்பில் இருந்து கட்டாயப்படுத்திக் கொண்டு வெளியேறினான். போனை எடுத்து விநோதினியைக் கூப்பிட்டான். அவள் அலுவலகத்தில் இருந்ததாகத் தெரிந்தது. அங்கு தொடர்பு கொண்டான்.

''என்ன விநோதினி. இத்தனை காலையில் ஆபீஸ்?''

''வேலை அதிகம். எனக்களிக்கப்பட்ட பொறுப்பை மிக ஒழுங்காக நிறைவேற்ற வேண்டாமா?''

''செய்ய வேண்டும்தான். எனக்கு ஒரு உதவி.''

''சொல்லுங்கள்...''

''நீங்கள் ரிஸர்வ் செய்து வைத்திருக்கிற காலேஜ் சீட் எனக்கு ஒன்று வேண்டுமே...?''

''எடுத்துக் கொள்ளுங்கள்.''

''அப்புறம் உங்களுக்கு? நீங்கள் எங்காவது வாக்குக் கொடுத்து வைத்திருப்பீர்களே?''

''இல்லை. உண்மையில் அந்த 'சீட்' உங்களுக்குத்தான், ரிசர்வ் செய்து வைத்திருந்தேன். கடைசி நேரத்தில் நீங்கள் இப்படித் தவிப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். போன வருஷம் நீங்கள் தவித்தது நான் அறிந்த சங்கதிதானே...?''

''ரொம்ப நன்றி விநோதினி.''

''சாப்பிட்டீர்களா?''

''இன்னும் இல்லை.''

''ஏன்?''

''தோன்றவில்லை.''

''தோன்றுமா என்ன? பசிக்குச் சாப்பிட வேறு யோசிக்க வேண்டுமா? ஏன் உடம்பு சரியில்லையா?''

''மனம் சரியில்லை. ஒரு மாதிரியாக மனம் களைத்து இருக்கிறது.''

''இன்னும் அரை மணியில் நான் அங்கு வருகிறேன். அதற்குள் குளித்துத் தயாராகுங்கள். நாம் இருவரும் எங்காவது சாப்

பிடப் போவோம்.''

கிருஷ்ணமூர்த்திக்கு ஒரு புதிய உற்சாகம் உடம்பு முழுக்க ஏற்பட்டது. சுறுசுறுப்பாய்க் குளித்தான். உடை மாற்றிக் கொண்டு கீழ் இறங்குகையில் கீழே ஹாலில் விநோதினி அமர்ந்திருந்தாள்.

''போகலாமா?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தாள் விநோதினி.

''எங்கே போகலாம்?''

''டிரைவ் — இன்னுக்கு.''

அவர்கள் புறப்பட்டார்கள்.

''அப்புறம், அந்தச் சாராய வியாபாரி என்ன பேசினான் என்று சொல்லவில்லையே...?''

''அரசியல் என்று எண்ணிக் கொண்டு எதையோ பேசினான். ஆனால் அரசியல் பேச அவன் என்னை அழைக்கவில்லை.''

அவன் மௌனமானான். அப்புறம் அவனாகவே பேசத் தொடங்கினான்.

''காமம், அகங்காரம், ஆணவம், பதவி வெறி, துரோகம் இவை எல்லாவற்றுக்கும் தான் அரசியல் என்று பேராகி விட்டது. எனக்கு உங்களைப் பற்றித்தான் கவலை.''

''என்னைப் பற்றி ஏன் உங்களுக்குக் கவலை? நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். என்னை மீறி யாரும் கற்பழித்துவிட முடியாது. பொது வாழ்க்கை என்று வந்து விட்டோம். ஆண்களுடன் கலந்து பழகுவதைத் தவிர்க்க முடியாது. என்றால் என்ன பண்ண? ஆண்கள் அப்படித்தான் இருக்கிறார்கள். கொஞ்சம் பார்க்க அழகாய், கொஞ்சம் புத்திசாலித்தனமாய், இருப்பவள் பொது வாழ்க்கைக்கு வந்தால், அவள் ஒரு மாதிரிப் பட்டவளாகத்தான் இருப்பாள் என்று நினைத்து விடுகிறார்கள். அழைத்தவுடன் வந்து விடுவாள் என்று நினைத்து விடுகிறார்கள்.''

அவர்கள் உணவுக்கு ஆர்டர் கொடுத்து விட்டுக் காரிலேயே அமர்ந்திருந்தார்கள்.

''ஆண்கள் இல்லாத இடம் எது, கிருஷ்ணமூர்த்தி?''

''ஆனாலும், நீங்கள் அவசரப்பட்டு இந்த இடத்துக்கு வந்திருக்கக் கூடாது. உங்கள் சிந்தனைக்கும் தகுதிக்கும் இந்த இடம் பொருந்தாது. நீங்கள் காயப்பட்டு விடுவீர்கள் போலவும், துன்பத்துக்கு ஆளாவீர்கள் என்பது போலவும் எனக்குத் தோன்றுகிறது.''

அவள் சில கணங்கள் எங்கோ பார்த்துக் கொண்டு யோசித்தபடி இருந்தாள். பிறகு சொன்னாள்.

''எனக்கும் அது தெரியும், கிருஷ்ணமூர்த்தி. ஆனால், அதே அபாயம் உங்களுக்கும் உண்டுதானே? நில விவகாரத்தில் உங்கள் பெயரும் அடிபட்டதுதானே? ஊழல் அரசியல்வாதி என்று சில நல்ல பத்திரிகைகள் கூட உங்கள் பெயரைச் சொன்னதுதானே? அது காயம் இல்லையா? அவமானம் இல்லையா? யோசித்துப் பாருங்கள்.''

அவன் பதில் பேசாமல் சாப்பிட்டு முடித்தான்.

''அப்புறம், உங்கள் திட்டம் என்ன?'' என்று அவளைக் கேட்டான்.

''இன்றைக்கா? இரண்டு மூன்று மந்திரிகளைப் பார்க்க வேண்டும். சிபாரிசு வேலைகள்தான். அப்புறம் இரவு பத்து மணிக்கு முதல்வரை அவர் வீட்டில் சந்திக்கப் போகிறேன். அதற்கு நீங்கள் கட்டாயம் என்னுடன் வர வேண்டும்.''

''முதல்வர் உன்னைத்தானே கூப்பிட்டிருக்கிறார்?''

''அதனால் என்ன? ஏன் வந்தாய் என்றா கேட்கப் போகிறார்? சும்மா வாருங்கள். எனக்கு ஒரு நோக்கம் இருக்கிறது.''

''என்ன நோக்கம்?''

''நான் உங்களுக்குத் தெரியாமல் கட்சிக்கு வந்துவிட்டதாகவும், எனக்கும் உங்களுக்கும் தகராறு என்பதாகவும் அவர் நினைத்திருக்கிறார். அது இல்லை என்று நான் சொல்ல வேண்டும்.''

''சொல்லி?''

''என்னை நான் நிரூபித்துக் கொள்ள வேண்டும்.''

''எதை?''

''நான் உங்களுடையவள் என்பதை.''

அவன் மகிழ்ச்சியில் திளைத்து நின்றான்.

(தொடரும்)

---

''டாக்டர்! ஏன் ஒரு மாதிரியா இருக்கிறீங்க? உடல்நிலை சரியில்லையா...?''

''அடடே... ஆமாம். எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

''எல்லாம் பத்து வருஷமா உங்க கிளினிக்ல நோயாளியா இருந்த அனுபவத்தை வச்சுத்தான்!''

''பேஷ்... பேஷ்... அப்போ நீங்களே ஒரு கிளினிக் ஆரம்பிக்கலாமே...?''

''ஆரம்பிக்கலாம். ஆனா போலி டாக்டர்ன்னு யாரும் கண்டுபிடிச்சுட்டா..?''

''கவலையேபடாதீங்க. யாரும் கண்டு பிடிக்க முடியாது!''



''அதெப்படி உறுதியாச் சொல்றீங்க?''

''இதுவரைக்கும் என்னையே யாரும் கண்டுபிடிக்கலையே...!''

— கடுவை. கோபால்சாமி.

"நான் உன்னைக் காதலிக்கிறேன், ஜகபந்து."

"நான் உன் காதலுக்கு ஏற்றவனில்லை, ஆலிவெட்டி. நீ என்னைக் காதலிப்பது பிசகு."

"எனக்கும் உனக்குமிடையே காதல் ஏற்படுவதுதான் இயற்கை, ஜகபந்து."

"எனக்குக் காதலிக்கப் பயமாயிருக்கிறது, ஆலிவெட்டி. நாம் ஒருநாள் பிரிந்து போவது நிச்சயம்."

"பிரிவு நிகழும் வரை நாம் ஒருவரில் ஒருவர் ஆழ்ந்திருப்போமே, ஜகபந்து. பிரிவு என்பது தவிர்க்க முடியாதது. சாவு இருக்கிறது, மூப்பு இருக்கிறது, மூப்பால் நேரும் மறதி இருக்கிறது."

"நீ நடைமுறைக்கு ஏற்றபடி நடந்து கொள்ள வேண்டும், ஆலிவெட்டி. என்னைக் காதலிக்கும் பெருந்தவறை இது வரை யாரும் செய்ததில்லை."

"உன் மனைவி?"

"சீ, இதெல்லாம் மிகப் பழங்காலத்து எண்ணம். காதல் என்ற பேச்சு வந்தாலே ஏன்தான் எல்லோரும் மனைவியைப் பற்றிப் பேசுகிறார்களோ! மனைவி கணவனைக் காதலிப்பது கஷ்டம்."

"ஏன், ஜகபந்து?"

"ஏனென்றால் அவனுடைய எல்லாக் குறைகளும் அவளுக்குத் தெரியும். அவன் செய்யும் பாவங்கள், விடும் குறட்டை, அவனிடம் உள்ள குறைபாடுகள் எல்லாம் அவளுக்கு அத்துபடி. அவனுடைய வாய் நாற்றம், வியர்வை நாற்றம், சோனி வயிறு, உடலின் உபாதைகள் எல்லாம் அவளுக்குத் தெரியும். மனைவி என்றுமே கணவனைக் காதலிப்பதில்லை; பொறுத்துக் கொள்கிறாள், அவ்வளவுதான்."

குறட்டையும் வாய் நாற்றமுந்தான் முக்கியமா, ஜகபந்து? மனிதனிடம் அவற்றை விட முக்கியமாக எதுவுமில்லையா?"

"இல்லாமலென்ன! பெரிய பெரிய மனிதர்களிடம் எவ்வளவோ சிறப்புகள், எவ்வளவோ திறமைகள் உண்டுதான்.



ஆனால் ஜகபந்துவாகிய நான் ஒரு சிறப்பு மற்றவன், ஆலிவெட்டி. நீ முப்பது வருஷமாக என்னுடன் பழகி வருகிறாய். எனக்கு ஒரு பதவியுயர்வு கூடக் கிடைக்கவில்லை என்பது உனக்குத் தெரியும்.''

''முப்பது வருஷமா? நிசமாகவா? எனக்கென்னவோ உன்னை நேற்றுத்தான் சந்தித்த மாதிரி இருக்கிறது.''

''அப்போது நான் இளைஞனாயிருந்தேன், ஆலிவெட்டி. இப்போது எனக்கு அறுபது வயது ஆகி விட்டது. இரண்டு வருஷம் முன்னாலேயே நான் ஓய்வு பெற்று விட்டேன். ஆனால் நன்றாக டைப் அடிக்கிறேன் என்பதற்காக முதலாளி இன்னும் என்னை வேலையில் வைத்திருக்கிறார்.''

''காதல் பேச்சை எடுத்ததுமே ஏன் வயதைப் பற்றிப் பேசுகிறாய், ஜகபந்து? வயதுதான் எல்லாமா?''

''ஆலிவெட்டி, உனக்குப் புரியவில்லை. இளமைப் பருவத்தில் என் மனம் கதவுகள் திறந்துள்ள வீடு போல் தாராளமாக இருந்தது. அதற்குள் நிறைய வெளிச்சம் வரும், காற்று வரும். காதல் பறவை வெண்ட்டிலேட்டரில் வைக்கோல் கொண்டு வந்து சேர்த்துக் கூடு கட்டும். நான் செடி கொடி மரங்களை நேசிப்பேன், வானத்தை நேசிப்பேன், பெண்களை நேசிப்பேன்.. இப்போது ஒவ்வொன்றாக எல்லாக் கதவுகளும் மூடிக் கொண்டு விட்டன. மிகவும் சுயநலக்காரனாக ஆகி விட்டேன் நான். காசைத் தவிர வேறெதையும் நினைக்கப் பிடிக்கவில்லை. எதிலும் சந்தேகம், எதிலும் குற்றம் காணும் தன்மை, கருமித்தனம் இவையெல்லாம் மனத்தை அரித்துத் தின்கின்றன. இப்போதெல்லாம் என் பிள்ளைகள் மறைவில் என்னைப் பற்றி 'சிடுமூஞ்சிக் கிழவன், கருமி...' என்று பேசிக் கொள்கிறார்கள்.''

''இந்த மாதிரி உங்க மொழிக் கொச்சை வார்த்தைகள் எனக்குப் புரியாது, ஜகபந்து. நான் வெளிநாட்டுக்காரி என்பதை மறக்காதே. அந்த வார்த்தைகளை இங்கிலீஷில் மொழிபெயர்த்துச் சொல்லு.''

''விட்டுத் தள்ளு. அதை நீ தெரிந்து கொள்ளத் தேவையில்லை. ஆனால் ஒன்று; என் பிள்ளைகள் சொல்வது சரிதான். நான் சிடுமூஞ்சிக்காரன், கருமி.....''

''உன்னைப் பார்க்கப் பாவமாயிருக்கிறது, ஜகபந்து.''

''அதனால்தான் சொல்கிறேன், என்னைக் காதலிக்காதே.''

''ஆனால் நான் உன்னைக் காதலிக்கிறேனே, ஜகபந்து! உன் குறட்டை, துர்நாற்றம், கருமித்தனம் எல்லாவற்றையும் மீறி....''

''முப்பது வருஷத்திலே எனக்கு ஒரு பதவியுயர்வு கூடக் கிடைக்கவில்லையே, ஆலிவெட்டி! என்னிடம் ஏதாவது சிறப்பு, திறமை இருந்திருந்தால் கிடைத்திருக்காதா? சிறப்பு இருந்தால் பெண்டாட்டியின் காதல், பிள்ளைகளின் மரியாதை, புலிப்பால்... என்னதான் கிடைக்காது?''

''பேசிக் கொண்டே போகாதே! என்னைக் காதலிக்க விடு!''

''நம்ம ஆபீஸ் டிபன் நேரம் முடிந்து போனது. டிபன் நேரம் முடிந்ததும் மாக்ஸ் பெர்சன் கம்பெனி லிக்விடேஷன் நோட்டீசை டைப் அடிச்சுக் கொடுக்கச் சொல்லியிருக்கார் மானேஜர். நாம் வேலையைக் கவனிக்கலாம் இப்போ...''

''எனக்கு வேலையிலே மனம் போகல்லே, ஜகபந்து.''

''அது எனக்குப் புரியறது ஆலிவெட்டி. ஆனால் என் வலது கையிலே முடக்கு வாதம் ஏற்பட்டிருக்கிறது வேறே யாருக்குத் தெரியாவிட்டாலும் எனக்குத் தெரியும். இல்லையா? முன்னே மாதிரி என் விரல்கள் வேகமாக இயங்கல்லே. நான் டைப் அடிக்க வேண்டிய நோட்டீஸ் ரொம்பப் பெரிசு. டைப் அடிக்க நிறைய நேரமாகும். அதனாலே என் காதல் கடிதத்தை எடுத்தெறிஞ்சு விட்டு வேறே காகிதம் வச்சு டைப் அடிக்கத் தொடங்கலாம் வா!''

டைப்ரைட்டரிலிருந்து காகிதத்தை எடுக்க ஜகபந்து கை நீட்டிய போது அலறினாள் ஆலிவெட்டி. ''கொஞ்சம் பொறு. அந்தக் காகிதம் இன்னுங் கொஞ்ச நேரமாவது என் நெஞ்சிலே தவழ விடு. அன்பனே! நம் காதல் கடிதம் இன்னும் கொஞ்ச நேரம் மின்விசிறிக் காற்றில் படபடக்கட்டும்!''

கவலையிலாழ்ந்தான் ஜகபந்து. இப்போதெல்லாம் வலது கையில் முடக்குவாதம் கடுமையாகி வருகிறது. எப்போது பார்த்தாலும் மணிக்கட்டில் வலி; விரல்கள் விறைத்துக் கட்டையாகப் போய்க் கொண்டிருக்கின்றன. முன் போல் வேகமாக டைப் அடிக்க முடியவில்லை. அவன் வேலை செய்யுமிடம் தனியார் அலுவலகம். அவனது குறை வெளிப்பட்டு விட்டால் அவனை வீட்டுக்கனுப்பி விடுவார்கள். இந்த நிலையில் ஆலிவெட்டியின் கொஞ்சல் அவனுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் அவன் பேசாமல் டைப்ரைட்டரில் சுற்றப்பட்டிருந்த காகிதத்தைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான்.

''நான் உன்னைக் காதலிக்கிறேன், ஜகபந்து.''

''எனக்கும் உன்னிடம் ஆசைதான், ஆலிவெட்டி....''

சீர்ஷேந்து முகோபாத்தியாயா

## 'ஸ்டிரைக்! ஸ்டிரைக்!'

'ஸ்டிரைக்' இன்றைய உலகில் மிகவும் பழகிய சொல்லாகி விட்டது. ஆனால் இந்தச் சொல் எப்படி வழக்கத்தில் வந்தது? 'Striking the mast' என்ற கப்பல் சம்பந்தப் பட்ட சொல் அது. கப்பலில் உள்ள பாய் மரங்களைச் சுருட்டிக் கட்டி அதனால் கப்பல் நகராதபடி செய்வது என்று பொருள். லண்டனில் 1768—ல், சம்பளம் சரியாகக் கிடைக்கப் பெறாத கப்பல் மாலு மிகள், பாய்மரங்களைச் சுருட்டி வைத்து விட்டுக் கப்பலை விட்டுச் சென்று விட்டார் கள். அதிலிருந்து வேலையில் ஏற்படும் தடங்கல் அல்லது வேலை நிறுத்தத்திற்கு 'ஸ்டிரைக்' என்று சொல்லும் வழக்கம் ஆரம்பமானது.

— ஆதாரம்: பிஸினஸ் இண்டியா.
தகவல்: ஆர். கிருஷ்ணவேணி.

ஜகபந்து விக்விடேஷன் நோட்டீசை டைப் செய்து எடுத்துக் கொண்டு மானேஜரின் அறைக்குள் போன போது அவர் டெலிபோனில் பேசிக் கொண்டிருந் தார். ரிசீவரை வைத்த பிறகு சொன்னார், "ரொம்ப லேட் பண்ணிட்டியே!"

ஆடிப் போய் விட்டான் அவன். என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை அவனுக்கு.

மானேஜர் காகிதத்தை வாங்கிக் கொள் ளக் கையை நீட்டினார். அதைக் கொடுக்க ஜகபந்துவும் கையை நீட்டினான். காகிதம் அவனுடைய மடங்காத விரல்களிலிருந்து நழுவித் தரையில் விழுந்து விட்டது.

அவனது வாழ்வில் இவ்வாறு நேர்வது இது முதல் தடவை.

அவன் இரண்டு மூன்று முயற்சிகளுக்குப் பிறகு ஒருவழியாகக் காகிதத்தை எடுத்துக் கொடுத்ததைக் கூர்ந்து கவனித்தார் மானேஜர். அறை ஏர்கண்டிஷன் செய்யப் பட்டிருந்தும் ஜகபந்துவுக்கு வியர்த்து விட்டது.

"ஆலிவெட்டி, நான் அகப்பட்டுக் கொண்டு விட்டேன்."

ஆலிவெட்டி சற்று நேரம் மௌனமாக இருந்தாள்; பிறகு வருத்தத்துடன் சொன் னாள், "உன் விரல்கள் என்னைத் தடவற போது அவை எவ்வளவு அழகாயிருக்கு தெரியுமா? விரல்கள் விறைத்துப் போய்க் கொண்டிருப்பது எனக்குத் தெரியாம லில்லே. உன் குறை நிறை இரண்டையும் சேர்த்துத்தான் நான் உன்னைக் காதலிக்கி றேன்."

"ஆனால் உன் மாதிரி வேறே யார் காதலிப்பாங்க, சொல்லு. அப்படி என்ன தேவை மத்தவங்களுக்கு...? இவங்க என்னை வேலையை விட்டு விரட்டிட்டா..."

"நீ போகாதே! அப்படிப் போறதாயிருந் தால் என்னையும் கூட்டிக் கொண்டு போ!"

"ஆலிவெட்டி, உனக்குப் பைத்தியந்தான் பிடிச்சிருக்கு...!"

ஜகபந்துவின் இரகசியம் விரைவில் வெளியாகி விட்டது. முதலில் அது ஆபீசில் அடிபட்டது; பிறகு வீட்டுக்கும் பரவியது. முடக்குவாதம்! நாசமாப் போச்சு! டைபிஸ் டுக்குக் கையில் முடக்குவாதம் வந்து விட் டால் அவனால் என்ன பயன்?

ஜகபந்துவின் மனைவி அவனைக் கேட்டு விட்டாள், "உன் வேலை போயிட் டாக் குடும்பம் எப்படி நடக்கும்? ஒரு காசு கூடச் சேர்த்து வைக்கல்லியே! ஒரு வீடு












கூடக் கட்டல்லியே! வாடகையை ஒழுங்காக் கொடுக்கல்லேன்னா வீட்டுக்காரன் நம்மை உதைச்சு வெளியே விரட்டிடுவானே! அப்போ நாம எங்கே இருக்கறது. என்னத்தைச் சாப்பிடறது?''

ஜகபந்துவுக்கு வயது வந்த பெண்கள் இரண்டு பேர். அவர்களுக்கு அவன் மேல் ஒரே எரிச்சல். அவர்கள் வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லைதான், ஆனால் முகபாவத்திலேயே அவர்களது எரிச்சல் வெளிப்பட்டது. அவனுடைய பிள்ளைகள் தங்கள் அப்பாவியான, திறமையற்ற தந்தையைப் பார்த்து இலைமறைவு காய்மறைவாக ஏளனமாகச் சிரித்தார்கள். சிடுமூஞ்சி, கருமி... இனிமேல் என்ன பண்ணுவார் பார்க்கலாம். முந்தி மாதிரி நாட்டாண்மை பண்ண முடியாது.

"ஆலிவெட்டி!''

''என்ன, அன்பே!''

''இன்னிக்கு மானேஜர் எனக்கு நோட்டீஸ் கொடுத்துட்டார்.''

''நீ அவர்கிட்டே போய்ச் சொல்லு.''

''என்ன சொல்ல?''

''ஏதாவது சொல்லு... அவர் காலிலே விழு... அழு...''

''அப்படியா சொல்றே?''

''ஆமா. உனக்கு என்னைத் தவிர ஒருத்தருமில்லே. நீ என்னையும் விட்டுட்டு எப்படி இருப்பே?''

''சரி.... ஜகபந்து எழுந்து மானேஜரின் அறைக்குச் சென்றான்.

''யாரு? ஜகபந்துவா...? உட்காருங்க. என்ன விஷயம்?''

''சார், நான் ரொம்ப ஏழை...''

மானேஜருக்கு எரிச்சல் ஏற்பட்டது. அவர் கையை ஆட்டிக் கொண்டு சொன்னார், ''அதை விட்டுத் தள்ளுங்க. குழந்தை குட்டிகள் இருக்கா?''

''இருக்கு சார்.''

''அவங்களிலே யாருக்காவது டைப் அடிக்கத் தெரியுமா?''

நல்லாத் தெரியும், சார்! நானே கத்துக் கொடுத்திருக்கேன், சார்!''

''அடுத்த மாசம் வந்து சேரச் சொல்லுங்க... இப்போ நீங்க போகலாம்.''

ஜகபந்து தன் இடத்துக்குத் திரும்பி வந்தான்.

ஆலிவெட்டி, என் இடத்துக்கு என் பிள்ளை வரப் போறான்.

''வாழ்த்துக்கள், அன்பே...! நான் உன்னைக் காதலிச்ச மாதிரி அவனையும் காதலிப்பேன்.''

''என்னை மாதிரியா? அப்போ நான்?''

''நீ...? நீ...? இந்த உலகம் ரொம்பப் பெரிசு, ஜகபந்து. யாரும் யாராவது ஒருத்தரையே அண்டியிருக்க முடியாது. அப்படியிருந்தால் நல்லதா, நீயே சொல்லு!''

ஜகபந்து தன் ஆலிவெட்டி டைப்ரைட்டரைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அதைச் செல்லமாகத் தட்டினான், ''சீ, வெட்கங்கெட்டவளே....!''

தமிழாக்கம்: சு. கிருஷ்ணமூர்த்தி



நிருபர்: உங்களுக்குப் பதினைந்து வயது தான் ஆகிறதா? அப்ப எப்படி கல்யாணம் செய்துக்கிட்டீங்க? இன்னும் மேஜர் ஆகலையே!

நடிகை: கரெக்ட்! அதனால்தான் விவாகரத்து பண்ணிடப் போறேன்!

— ஆர். நரசிம்மன்.



''இந்தத் தடவைதான் 'இண்டர்வியூ'வுல சம்பந்தம் இல்லாத கேள்வி கேட்பதை விட்டுட்டுப் பொருத்தமான கேள்வியாக் கேட்டாங்க!''

''என்ன கேட்டாங்க?''

''உட்கார்ந்தபடியே தூங்கிக் காட்டச் சொன்னாங்க...!''

— சீர்காழி ஸ்ரீராம்.

''எங்க ஸ்கூலில் நன்கொடை வாங்கறதில்லே!''

''அப்படியா?''

''ஆமாம். எல்லாத்தையும் பீஸாகவே வாங்கிடறோம்!''

— ஜோலை. அ. கதிர்வேல்.



# என் உயிர்த் தோழன்

**அத்தியாயம் 12**

**விருந்தும் விபரீதமும்!**

சிட்டு சமையல் செய்வதில் சுறுசுறுப்புடன் இருந்தாள். நடந்து முடிந்த சந்திப்பில் மனம் சந்தோஷத்தை வாரி இறைத்திருந்தது.

"சிட்டு... சந்தைக்கிப் போயி வந்தியே! அந்த ட்ராமக்காரப் பயல அங்க பாத்தியா...! ஓடிப் போயிட்டான்னு பாத்தா இங்க சந்தையிலதான் குப்பை கொட்றானாம். பாரும்மா...! காசுன்னா வாய இளிச்சிக்கிட்டு என்ன வேணாலும் பண்ணிடறானுங்க! நாட்ல தென்னவனுங்களா மலிஞ்சிக்கிட்டு வரானுங்க.. நல்லவங்க கொறஞ்சிக்கிட்டுப் போறாங்க!''

''சும்மா இருங்கப்பா. உங்களுக்கு ஆளன்னா அவருதான்! அவர இழுக்காம பேச முடியாது இல்லே...! சாப்பாடு ஆக்கிட்டு நான் கூப்பிடறேன். அது வரைக்கும் செத்த பேசாம உட்காருங்க!''

தமிழ் முரசுவுக்குச் சுரீர் என்றது. இப்படிப் பேசுவது மகளா! இப்படி அவள் பேசவே மாட்டாளே..! அப்பா என்ற பணிவு, பாசம், கூடவே இருக்கும் மரியாதை.. அன்புடன் வரும் அழகான வார்த்தைகள்! அவரால் நம்ப முடியவில்லை. மகள்தான் பேசினாள் என்பதை உணர்ந்து கொள்ளவே சில நொடிகள் ஆயிற்று.

"ஏன் உனக்கு இவ்வளவு கோபம்... அப்பா சொன்னது தப்பா?''

"தப்பு! தப்புத்தான்!! அவரு ரொம்ப நல்லவருப்பா! நீங்க உங்களப் பத்தி உயர்வா நெனைக்கிற மாதிரி, அடுத்தவங்களோட உயர்வையும் புரிஞ்சிக்கிங்கப்பா!" சிட்டு வேலைகளைப் பார்த்துக் கொண்டே சொன்னாள்.

தமிழ்முரசு மகளின் மனசை ஆராய்வது போலப் பார்த்தார். அவள் கண்களைக் கவனித்தார்.

"நாங்க ரொம்பக் குடுத்து வச்சவங்க! சொல்லி அனுப்பி இருந்தா நாங்களே உங்க வீடு தேடி வந்து உங்க பொண்ணக் கேட்டிருப்போம்! ஏதோ எங்க பையன் செஞ்ச அதிஷ்டம்.. உங்க மக எங்க வீட்டுக்கு மருமவளா வரணும்னு குடுத்து வச்சிருக்கு...!''

தமிழ்முரசு அமைதியாக அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"அப்பாவ நமஸ்காரம் பண்ணிக்கடா.. ராஜவம்சம்டா...! சேவை செய்யற மாதிரி நாம. நமக்கு அவரு சம்பந்தி ஆவறாருன்னா அது நாம செஞ்ச புண்ணியம்...!''

ஜோதி புரத்தின் தனவந்தர், தமிழ் முரசுவின் முன்னால் ஒரு தானியம் போல் ஆகி இருந்தார். அவர் மகளுக்குத் தம் வீடு தேடி வரன் கேட்டு வந்தது பெரிய பிரமிப்பையே ஏற்படுத்தி இருந்தது.

"என் சம்சாரம் கூடச் சொல்லுவாங்க... உங்க பொண்ணை நம்ம மகனுக்குக் கேக்கணும்னு! நமக்கு என்னடி தராதரம் இருக்குன்னு சொல்லுவேன்! 'நல்ல மனுஷாளுக்குப் பொருளு ரெண்டாவது, மனுஷங்க தாங்க முதல்லன்னு சொல்லுவா! அவ வாய் வார்த்தை பலிச்சிடுச்சிங்க!''

நன்றாக விஸ்தீரணமாக அகலவாட்டில் உயரமாகி இருந்த அவர் மனைவி உருவம் மணப் பெண்ணைப் போல கதவுக்கு பின்னால் வெட்கத்துடன் மறைந்தது.

தமிழ்முரசு அங்கு வந்திருக்கும் சேதி கேட்டு ஊரின் முக்கிய புள்ளிகள் உடனே கூடி விட்டனர்.

'சந்தனத்தேவன்பட்டியும் ஜோதிபுரமும் சம்பந்தம் பண்ணிக்கப் போதுடா!' இதனால் என் ஊட்டுக்கு மட்டுமில்லே... நம்ம ஊருக்கும் பெருமை...!'

எல்லோரும் சந்தோஷப்பட்டனர். அவ்வளவு பேரின் ஆரவாரத்தையும் புகழுரைகளையும் கேட்டுக் கொண்டே இருந்த தமிழ் முரசு கடைசியில் முத்தாய்ப்பாகப் பேசினார்.

"என் கண்ணுக்குள்ள வச்சுப் பொண்ண வளத்துட்டேன்.. ராசாத்தி போல அவள அனுப்பறேன்.. வச்சிப் பாத்துக்க வேண்டியது உங்க பொறுப்பு... என்ன கேக்கறீங்களோ செய்யறேன்...! நாளைக்கே பொறப்பட்டுவாங்க.. நாள் நல்லா இருக்கு! நிச்சயதார்த்தம் பேசி முடிச்சிடலாம்...!''

அவர் வார்த்தைகளுக்கு உடன் கட்டுப்பட்டனர். சிட்டுவுக்கு எதையும் எட்டவிடாமல் அவளை அடைக்கப் போகும் விஷயம் அங்கே சீக்கிரமாகப் பேசி முடிக்கப்பட்டது.

தாம் உடனடியாக எடுத்த முடிவைச் சரியான முடிவாக நினைத்துக் கொண்ட தமிழ் முரசு மறுநாள் அவர்கள் வருகைக்குக் காத்திருப்பதாகச் சொல்லி விட்டுப் புறப்பட்டார்.

## பாரதிராஜா

தென்னவன் திரும்பிப் பார்த்துக் கொண்டே வேகமாக ஓடிக் கொண்டிருந்தான். அவனை விரட்டிக் கொண்டிருந்தது ஒரு கும்பல். பிடித்து அவனைக் கடித்தே குதறி விட வேண்டும் என்ற வெறி அவர்களிடம் இருந்தது. அவனுக்கு இரைத்தது. ஆனாலும் ஓட்டத்தை நிறுத்தவில்லை. ஓரத்தில் பயாஸ்கோப் காட்டிக் கொண்டிருந்தவனைத் தாண்டி ஓடிக் கொண்டிருந்தான் தென்னவன்.

பயாஸ்கோப் பார்த்த சிலரும் எதற்கு ஓடுகிறார்கள் என்பதை ஓடும் போது தெரிந்து கொள்ளலாம் என முடிவு செய்து அந்த 'ஒலிம்பிக் ஜோதியில்' கலந்தனர்.

துரத்தி வந்தவர்களில் ஒருவர் சந்தைக்குப் போகும் வரை 'நல்ல கூந்தலு'டன்(!) இருந்தவர். அவன் சொன்னஷாம்புவை வாங்கி ஆசை தீரப் போட்டுக் குளித்ததன் பலன், ஏறக்குறைய எல்லா முடியும் உதிர்ந்து தலை மொட்டையாகி இருந்தார்.

"நீ சொன்னியேன்னுதானடா ஷாம்பு வாங்கிக் குளிச்சேன். நாளைக்குப் பொண்



னுப் பாக்குறதுக்கு எந்த மொகத்தை வச்சிக்கிட்டுடா போவேன்.. எவடா இனிமே என்னக் கட்டிக்குவா!''

அவர் பின்னால் சில 'ஷாம்பு உறுப்பினர்கள்' ஓடினர்.

பல்பொடி உபயோகித்துப் பல் மட்டுமல்ல, வாயும் பாதிக்கப்பட்ட ஒருவரும் துரத்திக் கொண்டிருந்தார். தம் ஆத்திரத்தைப் பேசித் தீர்க்க முடியாத அளவிற்கு அவருக்கு வாய் என்னவோ ஆகி இருந்தது.

தென்னவனின் முப்பத்திரண்டு பல்லையும் எடுத்தாலொழிய அவருக்கு ஆத்திரம் அடங்காது போலிருந்தது. அது ஓட்டத்தில் தெரிந்தது.

சில பெண்கள் இடைவெளி விட்டு ஓடி வந்தனர்.

'பிரா' வாங்கி இருந்த ஒருத்தி நடந்திருப்பதைச் சொல்ல முடியாத கூச்சத்துடன் இன்னொருத்தியைச் சேர்த்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தாள்.

இப்படியாகப் பெருத்த கூட்டம் தென்னவனைத் துரத்திக் கொண்டிருந்தது.

''அய்யா... அவனுங்க பேசச் சொன்னானுங்க. பேசினேன். நான் உங்க ஊர்ல நாடகத்துல நடிச்ச ஆளுய்யா... எல்லாரும் பாராட்னீங்களே! விக்கிற பொருள்ள இவ்வளவு விவகாரம் இருக்கும்னு தெரிஞ்சிருந்தாச் சத்தியமா நான் இதச் செஞ்சிருக்க மாட்டேன்... நான் போட்ட கிருஷ்ணன் வேஷம் மேல ஆணை... போலிய வித்துக் கடைசியில நம்மள பலி கெடாவாக்கிட்டானுங்களே! நான் சொல்றதக் கேளுங்க!''

பேசிக் கொண்டே ஓடினான் தென்னவன்.

''மறுபடியும் பேசறான் பாரு! அவனப் பேச விடாதிங்க! அவனப் பிடி.. வெட்டு... அவனப் புதைச்சிட்டுத்தான் மறுவேலை!''

''வேணாங்க...! மண்ணுல பொதைச்சாலும் பொணமாப் பேசுவான்.. எரிச்சிடுவோம்...!'' முழு மொட்டையர் ஒரு 'புத்த பிட்ச' போல சொல்லிக் கொண்டே வந்தார். அவர் ஓட்டம் தடைப்பட்டது.

துரத்தி வந்தவர்களுக்கும் அவனுக்கும் இடையில் கணிசமான அளவுக்கு இடைவெளி ஏற்பட்டு இருந்தது. அவன் ஒரு டீ சாப்பிட்டு விட்டுக் கூட ஓடலாம். நினைத்தான். அந்த டீக்கடைக்காரர் ஏதாவது சந்தையில் வாங்கியவராக இருந்தால் ஆபத்து! ஓடினான்.

தூரத்தில் குரல் கேட்டுக் கொண்டே இருந்தது.

வீரப்ப அய்யனார் கோயிலைத் தாண்டி வேகமாகத் திரும்பினான். விரட்டிக் கொண்டிருந்தனர்.

நடுவே சிலரும் சேர்ந்திருந்தனர். ஏற்கெனவே இருந்த கோபம் இப்போது இரட்டிப்பாகி இருந்தது. சீக்கிரம் ஓர் இடம் பார்த்தாக வேண்டும். பதுங்கியாக வேண்டும். யோசனை மனத்தில் ஓடியது.

பின்கட்டு வழியாகச் சிட்டுவின் வீட்

டுக்குள் நுழைந்தான் தென்னவன். அவர்களுக்கு நிச்சயம் இந்த இடத்திற்கு வந்து சேர ஓரிரு நிமிஷங்கள் ஆகும். 'நுழைந்த வீடு இதுவா அதுவா... இல்லை... போக்குக் காட்டி விட்டு ஓடி விட்டானா என்று ஐயம் எழும்... நிம்மதி. ஆனால் நெஞ்சில் துடிப்பு. வேகமாய் வந்தவன் நிதானித்துப் பக்கத்தில் உள்ள பரணில் உடும்பைப்போல தப்பி மெல்ல ஏறி ஒளிந்து கொண்டான். இருட்டாக இருந்தது. தட்டு முட்டுச் சாமான்கள். பாத்திரங்கள். எலி வேறு ஓடியது. வேர்த்தது. மூச்சு வாங்கியது. மெல்ல ஆசுவாசப்படுத்திக் கொண்டான். எங்கேயோ குட்டி போட்டிருந்த பூனை சத்தம் போட்டுக் கொண்டே இருந்தது. கீழே எட்டிப் பார்த்தான். விருந்து சாப்பிட்ட இடம் தெரிந்தது. பரணில் ஏதோ துர்நாற்றம் வீசுவது போல் இருந்தது. இருமல் தும்மல் எல்லாம் சேர்ந்து வந்தது. சமாளித்தான்.

வெளியே சத்தம் கேட்டது. "இந்தப் பக்கமாத்தாய்யா ஓடியாந்தான்!" சிலர் நின்று பேசினர்.

"அண்ணே... கோயில் வேண்டுதலா! மொட்ட அடிச்சதச் சொல்லவே இல்லியே! நீங்க மட்டுமா! இல்ல அண்ணியுமா?"

"ம்... அண்ணி. போடா..." அந்த ஆசாமிக்கு அடிதான் விழுந்தது.

"நமக்கு அறிவு வேணுய்யா! வாயப் பாத்துக்கிட்டு வாங்கிக் கட்டிக்கிட்டோம்! ஆறாவது அறிவு நமக்குன்னு இருக்கே... அத எண்ணிக்காவது நாம உபயோகப் படுத்தி இருக்கமா?"

பல்வலிக்காரர் பேச முடியாது போனாலும் கஷ்டப்பட்டுச் சொன்னார்.

"நீங்களே அப்படித்தாங்க உபயோகப் படுத்தி இருக்கீங்க!"

"இந்த நக்கல்தானே வேண்டாங்கிறது! பாரு... நம்மள நாயாட்டமா ஓட விட்டுட்டு அவன் பறந்துட்டான்."

மறுபடியும் ஓடினர்.

**த**மிழ்முரசு வேகமாக உள்ளே நுழைந்தார். அவர் வந்த போது வெளியே காலியாக இருந்தது. எல்லோரும் போயிருந்தனர்.

அவர் கையில் நான்கு மீன்கள். சிட்டு மீன் குழம்பு நன்றாகச் செய்வாள்.

"வர்ற வாசனையே சொல்லுது ஆத்தா உன் கைப் பக்குவத்தை.." — பாராட்டியவர்களும் உண்டு.

அவர் எப்போதாவது இப்படி ருசியாகச் சாப்பிடுவார். அவரேதான் வாங்கி வருவார். ஜோதிபுரத்து சம்பந்தத்தால் அவருக்கு மனசு நிறைந்திருந்தது. உடனே வாங்கி விட்டார்.

நாளை வருகிறார்கள். விடியற்காலை மகளிடம் சொல்லிக் கொள்ளலாம். முன் எச்சரிக்கை உணர்வுடன் எல்லாவற்றையும் திட்டமிட்டிருந்தார்.

மறுநாள் சமையல், மற்ற ஆட்களுக்கு எல்லாம் ரகசியமாகவே ஏற்பாடு செய்திருந்தார்.

அடுத்த இதழில்....

தொடர்ந்து நடக்கும் சிலைத் திருட்டு...! — கவர் ஸ்டோரி.



"சிட்டு.. இந்த மீனை ஆக்கும்மா... சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு. பொறுமையாச் செய்யி.. ஒண்ணும் அவசரமில்லே... உங்கம்மா பக்குவம் உனக்கும் அப்படியே இருக்கும்மா!"

"ஏப்பா... அப்ப எல்லாம் வாரம் முழுக்க மீன்தானா... தினமும் எப்படிப்பா தின்னுவீங்க?"

"அதான் போயாச்சேம்மா. அவ போனா... எல்லாமே போயிடுச்சி!"

அப்பா விட்டால் 'சோகராகமாகி' விடுவார். சட்டென மாற்றினாள்.

"நீங்க ஊஞ்சல்ல உட்காருங்கப்பா... முடிச்சிட்டுக் கூப்பிடறேன்!"

**தெ**ன்னவன் நெளிந்தான். பரணில் தான் 'கருவாடாகி'க் கொண்டிருப்பது தெரிந்தால் இப்படி ஆர்வத்துடன் 'மீனில்' இருப்பாளா!

அவள் தயாரிப்பில் இறங்கி விட்டாள்.

தென்னவனுக்கு மீன் குழம்பு வாசனை பசியை ஏற்படுத்தி விட்டது.

அவன் உபயோகித்த 'உஷ்'கள் அவளுக்குக் கேட்கவில்லை. பூனை வேறு கத்திக் கொண்டிருந்தது. அந்த இடம் ஒரு சின்ன மிருகக் காட்சிச் சாலை போல அவனுக்கு இருந்தது. நெளிந்தான். ஐம்புலன்களையும் அடக்கி அவளைத் தன் பக்கம் திருப்ப முயன்றான்.

'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்!; தென்னவனுக்கு மணியும் ஆயுதம்!' சின்னதாய் மூலையில் கிடந்த பூஜை மணி கையில் சிக்கியது. மெல்ல அந்த மணியின் நாக்கைத் தனியாக எடுத்தான். குறி வைத்து அவளைப் பார்த்து அடித்து விடலாம். அடித்தவுடன் அவள் பார்த்து விட வேண்டும். வீரப்ப அய்யனாரை வேண்டிக் கொண்டான்.

குழம்பை இறக்கிய கையோடு அப்பாவை கூப்பிடப் போனவளைப் பார்த்து விட்டான். அவளை நோக்கி மெல்ல வீசினான். அந்த வீச்சு அவளுக்குக் கொஞ்சம் வலியை உண்டாக்கி விட்டது. எரிச்சல் அடைந்தவளாய் அதை எடுத்தாள். எங்கிருந்து வந்து

விழுந்தது? பார்வை துழாவியது. பரணில் சந்தித்துக் கொண்டது. ஆடாமல் அசையாமல் அகல விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் தென்னவன் கண்கள் நான்தான் என்பது போல் கெஞ்சின. தன்னை விரட்டியது பற்றியும், ஏன் எதற்கு என்ற காரணம் பற்றியும் மெள்ள உதட்டசைவிலும், சைகையிலும் ஒரு குரங்கைப் போல சேஷ்டையால் அவன் புரிய வைத்துக் கொண்டே இருந்தான்.

சிட்டுவின் பார்வை விரிந்து ஆச்சர்யமாகியது. அவளால் நம்பவே முடியவில்லை. அவள் கால்கள் அவனை நோக்கி மெல்ல நடந்தன. நெஞ்சத் துடிப்புகள் அதிகமாகிக் கொண்டே வந்தன.

தென்னவன் 'இறங்கலாமா' என்று சைகையாலேயே கேட்டான்.

அவள் 'வேண்டாம்' என்றாள். அவளுக்குப் பயத்தில் முகம் வியர்த்திருந்தது. கை கால்கள் நடுங்கின.

வாசனை பிடித்து அப்பா அவராகவே வந்து விட்டார்.

''சீக்கிரம் போடும்மா...'' உட்கார்ந்தார்.

''சரிப்பா!'' சிட்டு கவனத்துடன் எல்லாவற்றையும் எடுத்து வந்தாள். அவசரமாகப் பரிமாறினாள்.

ஒரு தட்டில் அப்பாவுக்குத் தெரியாமல் போட்டு இரண்டு மீனை வைத்து அவனுக்கும் கொடுத்தாள்.

''என்னம்மா பண்றே?''

''காக்காவுக்குச் சோறு வைக்கிறேம்பா!''

''வீட்டுக்குள்ளியேவா?''

''வந்துடுச்சேப்பா..!''

''வெளிய விரட்டும்மா... அதம் பண்ணிடப் போவுது! சரி.. அப்படியே சுத்துது பாரு பூனை.. அதுக்கும் வச்சிடு!''

''காக்காயிக்கு வைக்கிறேம்பா... அது சாப்பிட்டுட்டு மீதிய அதுக்கு வச்சிடும்!''

''என்னம்மா சொல்றே?''

''இல்லை வச்சிட்டேம்பா...''

''சீக்கிரம் வா... விக்கல் எடுக்குது பாரு. தண்ணி வைக்காமப் போயிட்டே!''

தென்னவன் வேகமாய்ச் சாப்பிட்டான்.

அப்பாவுக்குத் தண்ணீர் எடுத்து வர ஓடினாள். அவர் காத்திருந்தார்.

விக்கல் சத்தம். தென்னவன்தான். 'சத்தம் கேட்டிருக்குமோ?' சமாளித்தான்.

சிட்டு ஓடி வந்தாள்.

''விக்கல் நிக்கலியாப்பா?''

''எனக்கு நின்னுடிச்சிம்மா... ஆனா எங்கையோ கேட்ட மாதிரி இருந்தது!''

''எப்படிப்பா கேக்கும்! உங்களுக்குத் தெரியாம வந்திருக்கும்.. காக்காவுக்கு எல்லாம் விக்கல் வராதுப்பா!''

''ஆமாமா...'' அவர் குடிக்கப் போனபோது மறுபடியும் விக்கல். தான் தானோ என்ற ஐயப்பாட்டுடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு குடித்தார். சிட்டுவுக்கு நடுக்கம். தென்னவனுக்குச் சீக்கிரம் தண்ணீர் தந்தாக வேண்டும்.

அவனுக்குத் தாங்கவில்லை.

ஒரு முள்ளால் அடித்தான். அவள் மீது பட்டு விழுந்தது.

அதைப் பார்த்தார் அவர்.

''என்னம்மா முள்ளு விழுது?''

''காக்காவுக்கு வச்சேன் இல்லப்பா... கண்ட எடத்துல அசிங்கம் பண்ணுது!''

''ஆமாமா...!''

எழுந்தார் தமிழ்முரசு. பல் குச்சியை வாயில் குத்திக் கொண்டே சொன்னார்.

''பிரமாதம்மா... நீ செஞ்சதுக்கு எல்லாம் சிகரம் வச்சாப்புல நாளைக்கு நம்ம வீட்ல ஒரு நல்ல காரியம் நடக்கப் போவுது! ம்... இனிமே அவுங்கதான் குடுத்து வச்சவங்க..!'' முனகிக் கொண்டார்.

''என்னப்பா சொல்றீங்க?''

''ஒண்ணுமில்லைம்மா... பொறுத்திருந்து பாரு... ராத்திரி உனக்கு துணைக்குப் படுக்கத் தாமரைய வரச் சொல்லி இருக்கேன். நான் பக்கத்துத் தெரு பாவாடை சாமி வீடு வரைக்கும் போயிட்டு வந்துடறேன்!'' கிளம்பினார்.

சிட்டு அமைதிக்கு வந்தாள். தென்னவன் 'பரணில்' செட்டில் ஆகி இருந்தான். மீன் குழம்பு பல விஷயங்களை அவனுக்கு மறக்க அடித்திருந்தது.

''சிட்டு இன்னும் ரெண்டு மீனு! சூடா...''

''இது என்ன ஹோட்டலா... நீ என்னமோ ரூம் எடுத்துத் தங்கி இருக்கிற மாதிரி இல்ல கேக்கறே! எனக்கு மனசு கெடந்து அடிச்சிக்கிட்டே இருக்குது!''

தென்னவன் தலை அவளுக்கு ஒரு 'கார்ட்டூன்' போலத் தெரிந்தது.

அதைப் பார்க்கச் சிட்டுவுக்குக் கஷ்டமாக இருந்தது. ஆனாலும் சிரித்து விட்டாள்.

தென்னவன் உபயத்தில் பூனை எஞ்சியவைகளை பக்கத்தில் தின்று கொண்டிருந்தது.

''சிட்டு... இந்த மணி மாதிரி என்னை பேச விடாம ஆக்கிட்டியே...!''

நாக்கு இல்லாத மணியை அவனிடம் எடுத்துக் காட்டினான். அவள் எட்டி அதை வாங்கிக் கொண்டாள். அவன் எறிந்த நாக்கை அதில் மாட்ட வேண்டும்.

''நீ இறங்கிப் போயிடுய்யா! தாமரை வேற வந்திடுவா! சீக்கிரம் பின்கட்டு வழியாப் போயிடு...''

''வந்த வழியாவே போய் துரத்தி வந்தவங்ககிட்ட என்ன மாட்டிக்கச் சொல்றே இல்லே சிட்டு!''

சிட்டுவுக்குக் கஷ்டப்பட்டு எல்லாவற்றையும் புரிய வைத்தான்.

''நீ போவலே... நான் மாட்டிக்குவேன்!''

''போனேன்னா... நான் மாட்டிக்குவேன்...!''

சிட்டுவுக்குத் தென்னவன் நிலை புரிந்தது. ஆனாலும் தன் நிலையை நினைக்கப் பயமாக இருந்தது.

பரணில் விளையாட்டாய்த் தெரிந்த தென்னவனால், விடிந்தால் ஏற்படப் போகும் விபரீதம் தெரியாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் சிட்டு.

(தொடரும்)

* லீலா இராம், தக்கலை.

? அமைதியின் விலை என்ன?

! இதுவரை 500 கோடி ரூபாய்; மற்றும் விலை மதிக்க முடியாத நூற்றுக்கணக்கான இந்திய வீரர்களின் உயிர்கள்.

* பி. எஸ். வாசன், ஈரோடு.

? நமது இந்தியா எப்போது தன்னிறைவு அடையும்?

! நமது இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனும் தன்னிறைவு அடையும் போது.

* எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.

? 'நடைமுறைச் சிக்கல் காரணமாகத்தான் தெலுங்கு—கங்கைதிட்டத்தைஎம்.ஜி.ஆரால் செயல்படுத்த முடியவில்லை' என்று முன்னாள் அமைச்சர் ராஜாராம் பேசியிருக்கிறாரே?

! எம்.ஜி.ஆரால் விடுவிக்க முடியாத சிக்கலைக் கருணாநிதி விடுவித்து விட்டதாக ஒப்புக் கொண்டவராகிறார்.

* செ. கண்ணன், கம்பம்.

? அமைதிப்படை ஆதரவு கருத்தரங்கில் நடந்த ரகளை பற்றி...?

! கருத்தரங்கு என்றால் அதில் பல்வேறு சிந்தனைகளுக்கும் இடமளிப்பதுதான் சிறந்தது. 'ஆதரவுக் கருத்தரங்கு' என்பது அர்த்தமற்றது. ஆதரவுக் கூட்டம் என்றால் ஏற்கலாம். கருத்தரங்கு அல்ல. ஆதரவுக் கூட்டம் என்று தெரிந்த பிறகு, மாற்றுக் கருத்து உள்ளவர்களுக்கு அங்கு வேலையில்லை. அவர்கள் தனியே வேறு கூட்டம் நடத்துவதுதான் முறை.

# சாதா பல்டி, அந்தர் பல்டி— அரசியல் வேறுபாடு என்ன?

* டி. ரமேஷ்குமார், பரங்கிப்பேட்டை.

? சமீபத்தில் உங்களை மிகவும் பாதித்த விஷயம்?

! அமைதியாகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த ஆர்.எஸ்.எஸ். ஊழியர்கள் மீது சீக்கிய பயங்கரவாதிகள் திட்டமிட்டுத் தாக்குதல் நடத்த மோகா நகரில் இருபது பேர் சுட்டுக் கொல்லப்பட்டது மிகப் பெரிய அதிர்ச்சி. இதனால் பஞ்சாப் ஹிந்துக்கள் பயந்து வெளியேறுவார்கள் என்பதும் இதர மாநிலங்களில் உள்ள சீக்கியர் மீது ஹிந்துக்கள் பழிவாங்கும் படலத்தைத் தொடங்குவார்கள் என்பதும் பயங்கரவாதிகளின் எதிர்பார்ப்பு. ஆனால் திருப்பித் தாக்கும்படி தூண்டாமல் ஆர்.எஸ்.எஸ். மற்றும் பி.ஜே.பி. தலைவர்கள் பொறுப்புணர்வுடன் நடந்து கொண்டு, நம் மதிப்பில் உயர்ந்திருக்கிறார்கள். பயங்கரவாதிகள் நினைத்த நேரத்தில் நினைத்த இடத்தில் தாக்க முடிவது மத்திய அரசுக்குப் பெரும் தலைகுனிவு. பயங்கரவாதிகளுக்கு உதவுவதை பாகிஸ்தான் இன்னும் நிறுத்தவில்லை என்பது தெளிவு. பஞ்சாப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதில் மத்திய அரசு அவசரமோ, தீவிரமோ காட்டாதது நாட்டின் துரதிர்ஷ்டம்.

* சாந்தா ஜெயராமன், காஞ்சிபுரம்.

? அரசியலுக்கு முற்போக்குக் கொள்கைகள் தேவையா? முரண்பட்ட கொள்கைகள் தேவையா?

! முரண்பாடு என்பது பிற்போக்கான விஷயம் அல்ல. நேற்றைய எனது ஓர் எண்ணம் தவறானது என்று உணர்ந்து இன்று கருத்தை மாற்றிக் கொள்வேனானால் அது முன்னேற்றமே. முற்போக்கு சிந்தனை என்பதாகக் கூறப்படுவதெல்லாமே முன்னேற்றத்துக்கு உதவுவதாக இருக்கும் என்ற நிச்சயமுமில்லை. தேவைப்படுவது முதிர்ந்த அறிவு, யதார்த்த சிந்தனை, செயல்திறன்.

* லலிதா, சென்னை.

? சாதா பல்டிக்கும், அந்தர் பல்டிக்கும் அரசியல் ரீதியான வேறுபாடு என்ன?

! மாதவன், ராகவானந்தம் ஆகியோர் 'ஜெ'யுடன் சேர்ந்தது சாதா பல்டி என்றால், காளிமுத்து அடித்தது அந்தர் பல்டி. நாளை வீரப்பனும் சேருவாரானால் அது சூப்பர் பல்டி!

* கே. கணேஷ், சென்னை — 6.

? மிசாக் கைதிகளுக்குத் தி.மு.க. விருது வழங்கப் போகிறதாமே?



* டி.வி. ரேடியோ கார்ப்பரேஷன்



* நடைமுறைச் சிக்கல்



* 1432 புகார்கள்



* முதல்வருக்குச் சங்கடம்



* அந்தர் பல்டி

! இனி அத்தகைய நிலைமைகள் இந்தியாவில் தோன்றவே கூடாது என்பதற்கு ஒரு நினைவூட்டல் நிகழ்ச்சியாகக் கருதப்பட வேண்டும்.

*** ஜி. குசேலன், சங்கராபுரம்.***

**? 'பல்லவன் மீது கடந்த இரு மாதங்களில் 1432 புகார்கள் வந்துள்ளன' என்று கமிஷனர் பி. துரை கூறுகிறாரே?**

! புகார் செய்து என்ன பயன்? நடவடிக்கை எடுக்க வேண்டிய பல்லவன் கழகம், தொழிலாளர் கிளர்ச்சிக்கு அஞ்சி எந்த நடவடிக்கையும் எடுப்பதில்லை. போலீஸும் பல்லவனுக்குப் புகார்களை அனுப்பி, நடவடிக்கை எடுக்கக் கோருவதோடு சரி. அரசுத் துறையில் இருப்பதால்தான் இந்த நிலை. ஆம்னி பஸ்களைப் பிடித்தார்களே, அந்த உறுதியை அரசின் போக்குவரத்துக் கழகங்களிடம் அமைச்சரோ, அதிகாரியோ காண்பிக்க முடியுமா?

*** கு. கணேசன், சென்னை — 15.**

**? காமராஜர் பிறந்த நாளைக்கும் இலவச அரிசி வழங்கக் கோரி இளைஞர் காங்கிரஸார் போராடிச் சிறை சென்றுள்ளனரே? இலவச அரிசித் திட்டத்தை விரிவுபடுத்தினால் என்ன?**

! அதானே. முந்நூற்று அறுபத்தைந்து நாட்களுக்கு முந்நூற்று அறுபத்தைந்து தலைவர்கள் கிடைக்காமலா போய் விடுவார்கள்!

*** ந. பிலிப்செல்வமுத்து, நெய்வேலி.**

**? துணுக்குறச் செய்த துணுக்கு ஒன்று...?**

! பல பானங்களை இப்போது டெட்ரா பாக்கில் அடைத்துத் தருகிறார்கள். இந்தக் காகித அட்டைப் பெட்டி தயாரிப்புக்கு எக்கச்சக்கமாக மரங்கள் அழிக்கப்படுகின்றன என்ற துணுக்குச் செய்தி உண்மையிலேயே துணுக்குறச் செய்தது. பாட்டில்களில் பானங்களை அடைத்துத் தருவதே சிறந்தது என்ற முடிவுக்கும் வர முடியவில்லை. ஏனெனில் இதில் போலிகள் மிகுதி!

*** அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.**

**? 'தி.மு.க. ஆட்சியைக் கலைத்தால் இந்திய வரைபடத்தில் தமிழகமே இராது' என நாஞ்சிலார் கூறியிருக்கிறாரே?**

! இப்படித்தான் சிலர் பிரமாதமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு முதல்வரை இக்கட்டில் சிக்க வைக்கிறார்கள்.

*** எஸ். திருநாவுக்கரசு, சென்னை — 44.**

**? 'தேசிய முன்னணி வெற்றி பெற்று ஆட்சி அமைத்தால் தொலைக்காட்சியும், வானொலியும் தன்னிச்சையாக இயங்கத் தனி கார்ப்பரேஷனிடம் ஒப்படைக்கப்படும்' என்று வி.பி. சிங் கூறியுள்ளாரே?**

! அத்துடன் பத்திரிகைக் காகிதம் இயந்திர சாதனங்கள் முதலியவற்றில் அரசாங்கத்தின் கட்டுப்பாடு இராது என்றும் மெய்யான பத்திரிகை சுதந்திரம் தழைக்கும் என்றும் கூறியுள்ளார். இந்த கருத்துக்களெல்லாம் போற்றி வரவேற்கப்பட வேண்டியவைதாம். ஆனால் வி. பி. சிங் இவற்றில் வெற்றி பெறும் சிங்காக மாற, பல்வேறு கட்சித் தலைவர்களிடையே கருத்தொற்றுமை ஏற்படுவதுடன் பதவி ஆசையும் விடை பெற வேண்டுமே! அங்கேயல்லவா இருக்கிறது சிக்கல்!

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**ஜி. குசேலன்,**
**145, கடை வீதி,**
**சங்கராபுரம்.**

# தெய்வ தரிசனத்தில் ஒரு மானுடப் பார்வை!




"துவாரபதி அப்பனைத் தரிசனம் செய்து கொண்டு வெளியே வந்தோம். மதில் சுவரில் பொழிந்த மாதிரி குழி குழியாக இருந்தது. "ஏன் இப்படி இருக்கிறது?" என்று கேட்டேன்.

"போலீஸ் துப்பாக்கி சுடும் பயற்சிக்காக இந்தக் கோவில் மதில் சுவரைப் பயன்படுத்தினார்கள். குண்டுகள் துளைத்த அடையாளங்கள்'' என்றார் ஒருவர்.

"அடாடா! பிரிட்டிஷார் என்ன அநியாயம் செய்திருக்கிறார்கள். கோவில்களுக்காவது மரியாதை காட்டியிருக்க வேண்டாமா!'' என்றேன்.

"இல்லை இல்லை. பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு நம்முடைய போலீஸார்தான் இங்கே சுடப் பழகினார்கள். ஊர் ஜனங்கள் ஆட்சேபணை தெரிவித்த பிறகு நிறுத்தி விட்டார்கள்,'' என்றார்.

மனம் நிஜமாகவே புழுங்கியது. இவ்வளவு அறியாமையா? பாதுகாக்க வேண்டிய மிகச் சிறந்த சரித்திரச் சின்னத்தைப் பாதுகாக்க வேண்டியவர்களே தகர்ப்பது எவ்வளவு கொடுமை! இந்துமதக் கோவில் என்பதற்காக வேண்டாம். சரித்திரச் சின்னம் என்றாவது பார்க்க வேண்டாமா? இந்த மாதிரி வேறு எந்த தேசத்திலாவது நடக்குமா?'' — என்று தம்முடைய முன்னுரையில் அங்கலாய்க்கிறார் "தெய்வதரிசனம்'' வழங்கும் ஆனந்தி. திருக்கோவில்களைப் பற்றிய பக்திமயமான கட்டுரைகள் என்பதோடு கலை, இலக்கியம் இவற்றை அணைத்துச் செல்வதாகவும் மனிதாபிமானப் பார்வையுடன் சுவாரஸ்யமாக எழுதப் பட்டுள்ளனவாகவும் விளங்குகின்றன. கல்கியில் தொடராக வெளிவந்த இந்தக் கட்டுரைகள். நூலிலிருந்து சில பகுதிகள்:

வட நாட்டு பக்தர்கள் சிலர் வருகிறார்கள். அவர்களுடைய அர்ச்சனைத் தட்டை வாங்கிக் கொண்டு அர்ச்சனையைத் தொடங்குகிறார், அர்ச்சகர்.

ஓர் அர்ச்சகர் அந்த வட நாட்டுப் பெண்மணியின் குழந்தையை வாங்கிக் கொண்டு கருவறைக்குள் செல்கிறார். குழந்தையின் சிரம் முருகப் பெருமானின் பாதங்களில் படும்படி தலைகீழாகச் சாய்த்துப் பிடிக்கிறார். "அடடா! குழந்தை அலறப் போகிறது!'' என்று எண்ணுகிறோம். ஆனால் அது சிரிக்கிறது! விபூதி குங்குமம் இட்டுக் குழந்தையைத் தாயிடம் கொண்டு போய்க் கொடுக்கிறார். அகமும் முகமும் மலர, முருகப் பெருமானையே பெற்று விட்டது போல் வாங்கி அணைத்துக் கொள்கிறார் அந்தப் பெண்மணி. (மயிலம் முருகன் கோவில்).

கோவிலைச் சுத்தம் செய்து கொண்டிருந்தார் ஓர் இளம் பெண்மணி. வறுமையின் எல்லையில் இருப்பவராகத் தோன்றியது. புத்திர சம்பத்து இருக்கிறது என்று கூறினார். நைவேத்தியம் செய்த பழங்களை அவர் கையில் கொடுத்தேன், குழந்தைகளுக்காக. வாசலில் வந்த போது ஓர் அழகான பசு, மண்டபத்தில் நுழைந்து வந்தது. கையிலிருந்த பழங்களை "இந்தாம்மா'' என்று பசுவுக்குக் கொடுத்தார் அந்தப் பெண்மணி. பசு அவரைத் தொடர்ந்து வந்தது. "நாளைக்குத் தரேம்மா, போய்ட்டு வா,'' என்று அவர் கூற, அது தலையை ஆட்டி விட்டு அங்கேயே முளைத்திருந்த புல்லை மேயச் சென்றது. இந்தக் கருணையில் தெய்வத்தையே கண்டது போல் விம்மிதமடைந்தது நெஞ்சம். (மாற்றூர் கோவில்).

இந்த மண்டபத்தில்தான் சாக்கியர் கூத்து, கூடியாட்டம் முதலிய நாட்டிய நாடகங்கள் நடைபெறுகின்றன.

விதூஷகனுக்கு முக்கிய பங்கு அளிக்கப் படுகிறது. தவறு செய்கின்ற எவரையும் பரிகசித்து அதன் மூலம் திருத்தும் உரிமை விதூஷகனுக்கு உண்டு. ஒருவர் தாமதமாக வந்தால் அதைக் கூடச் சுட்டிக் காட்டுவான் விதூஷகன். ஸாமுத்திரியைக் கூடக் கிண்டல் செய்வான். அதிகாரிகள் தவறு செய்தால் எள்ளி நகையாடுவான். இப்படி அரசர்களையும் அதிகாரிகளையும் விமரிசிக்கும் சர்வ சுதந்திரம் நாடகக் கலைஞர்களுக்கு அந் நாளிலேயே அளிக்கப்பட்டிருந்ததை நினைத்தால் ஆச்சரியமாக இருக்கிறது. நாகரிகம் மிகுந்த இந்த நாளில், ஜனநாயக நாட்டில் பத்திரிகை சுதந்திரத்துக்காகவும் அரசை விமரிசிக்கும் உரிமைக்காகவும் போராடும் நிலையில் இருக்கிறோம் நாம்! (கோழிக்கோடு ஆலயம் கட்டுரை)

தெய்வ தரிசனம் — ஆனந்தி. விலை ரூ. 27.00 வெளியீடு: வானதி பதிப்பகம், சென்னை — 17.

— சுப்ரபாலன்



# குங்குமம்

14.7.'89 இதழில் ஆரம்பம்



## ரஜினிகாந்த் அனுபவங்கள்

புதுமைகள்
நிறைந்த தொடர்.

## சுஜாதா பதில்கள்

கேள்வி பதில்கள்....
சூடும், சுவையும்
கலந்த பதில்கள்.





## பட்டுக்கோட்டை பிரபாகர்

## காதல் ஒத்திகை

கிளுகிளுப்பான
தொடர்கதை

இன்றே உங்கள் பிரதிக்குச் சொல்லி வையுங்கள்!

## வட்டமேஜை

• தலையங்கம் படித்தேன். பல்லவன் ஊழியர்கள் செய்யும் தவறுகளை மிகத்தெளிவாக விளக்கியுள்ளீர்கள். இந்த தலையங்கத்தைப் படித்தாவது, அவர்கள் திருந்த வேண்டும் என்பது எனது பணிவான வேண்டுகோள்.

அயன்புரம், ரஜினி ஜெயகுமார்.

• சத்துணவுடன் முட்டை, கவர் ஸ்டோரியும், அட்டைப் படமும் சிறப்பாக இருந்தாலும், அட்டைப் படம் குறித்து ஒரு சின்னச் சந்தேகம். எந்தச் சத்துணவுக் கூடத்தில் இப்படி பாயை விரித்துக் குழந்தைகளுக்கு வாத்தியாரம்மாவோ அல்லது ஆயாவோ இப்படி ஊட்டி விடுகிறார்களாம்!

திருப்பரங்குன்றம், எஸ். மந்திரமூர்த்தி.

• அருமையான திட்டம்தான்; ஆனாலும் கஷ்டம்தான். சினிமாப்பாட்டு மாதிரி அருமையான தலைப்புத்தான்; சுவையான கட்டுரைதான்!

சென்னை — 23, த. சத்திய நாராயணன்.

• நல்லதொரு திட்டத்தை நடைமுறைப்படுத்தும் போது சில பல சிக்கல்கள், தொல்லைகள் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. அந்த வகையில் சத்துணவுடன் முட்டை வழங்குவதை வரவேற்க வேண்டுமேயல்லாமல் குமரி அனந்தனைப் போல் எதிர்த்திடக் கூடாது.

பெங்களூர், ப. மூர்த்தி.

• என்ன சார் அத்தி பூத்த மாதிரி ரொம்ப நாளைக்குப் பிறகு ஓர் ஆங்கிலப் படத்துக்கு விமர்சனம் எழுதியிருக்கிறீர்கள்.

தக்கோலம், அ. முஸ்தபா.

• பாவேந்தரைப் பற்றி வந்த 'ஆரம்பம்: முருகதாசன்; முடிவு: உலக நேசன்' என்ற கட்டுரை அற்புதம்.

சென்னை — 17, லலிதா ராணி.

• கப்ர பாலன் எழுதிய கதவை உடையுங்கள் கவிதை மனத்திற்கு உரமளித்த உன்னதக் கவிதை.

மதுரை — 9, பிரபாகர் ப்ரியன்.

• "விடியலை நோக்கி..." என்ற மனோ பாஸ்கரனின் சிறுகதையில் சில அரசியல் வாதிகளால் இளைஞர் சமுதாயம் பாழ்படுவதுபற்றி மிக அழகாக விளக்கப்பட்டிருந்தது. ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

திருச்சி — 1, எஸ். இந்திர பூபதி.




## அருமையான தலைப்புத்தான்; சுவையான கட்டுரைதான்!

• ம.வி. வீடியோ பக்கங்களில் எஸ். பிரியதர்ஷினி என்ற வாசகி எழுதியிருந்த "அபூர்வ சகோதரர்கள்" கற்பனை படு அமர்க்களம். இன்னமும் நினைத்து நினைத்துச் சிரிக்க வைத்துக் கொண்டிருக்கிறது.

செங்குன்றம், அ. ஜமால் மொய்தீன்.

• அரசுப் பணிக்கு, புதிதாக ஆட்களை நியமனம் செய்யக் கூடாது என்று 'தராக' கூறியுள்ளார். ஆனால் அரசினர் எந்த ஒரு பணிக்கும் அடிப்படையாகத் தேவைப்படும் பணியாளர்களை நியமனம் செய்யாமல், அதை மேற்பார்வையிடும் அலுவலர் போன்ற பதவிகளையே நிறைய உருவாக்குகின்றனர். இதனால் அடிமட்டத்தில் பணி நடக்காமல், 'முகாம்' என்ற பெயரில் அலுவலர்கள் வீடுகளில் ஓய்வு எடுக்கிறார்கள். இதற்கு அரசுப் பணத்தையும் (பயணப்படி) வாங்கிவிடுகின்றனர். இது மிகப் பெரிய குறைபாடு.

திருச்சி — 21, க. இராசரெத்தினம்.

• 'வலிப்பு நோய்' குறித்த டாக்டர் வேல் முருகேந்திரன் கருத்துக்கள் ஒவ்வொன்றும் பசுமரத்து ஆணி போல் மனத்தில் பதிந்து விட்டது. அந்நோய் வருபவர்களுக்கு அவர்து பதில்கள் ஒரு வரப்பிரசாதம்.

புதுவை — 3, கே.எஸ். மாறன்.

• 'மன்னார்குடி'யை ஒரு விசிட் செய்து ஊரின் நிறை குறைகளைப் பற்றி அழகான படங்களுடன் தகவல்களைச் சேகரித்து வெளியிட்ட விதம் நன்றாக இருந்தது.

ஈரோடு, மேஜர்தாசன்.

• நான் வசிக்கும் மன்னார்குடி பற்றிய கட்டுரை கண்டேன். மன்னை நகரின் சிறப்புகளையும், குறைகளையும், மக்களின் சில ஏக்கங்களையும் அழகாக எடுத்துக் காட்டியது அக்கட்டுரை. இன்னொரு செய்தி: மன்னை அரசுக் கல்லூரி வளாகத்தில் நகரின் குடிநீருக்காக, ஆயிரம் அடிக்கு மேல் 'போர்' போட்டு வருகிறார்கள். அவ்வாறு தோண்டும் போது கறுப்புப் பாறைகள் போல கரி கிடைத்திருக்கிறது. அக்கரியின் சாம்பிள் சோதனைக்காகச் சென்றுள்ளது. அது தரமானதாகவும், அதிக அளவிலும் இருந்தால், மன்னையில் நிலக்கரிச் சுரங்கமே அமையக்கூடும்!

மன்னார்குடி, எஸ். ராஜேந்திரன்.

• மன்னார்குடிக்கு விசிட் செய்த திருபர்ஒருவிஷயத்தைத்தவறாகப் புரிந்து கொண்டு எழுதியுள்ளார். மன்னார்குடியில் பெண்கள் மேல் நிலைப்பள்ளியே கிடையாது என்பது சரியல்ல; மாறாக மிகச் சிறப்பு வாய்ந்த செயின்ட் ஜோஸப் பெண்கள் மேல் நிலைப் பள்ளியுள்ளது. இந்த நிலையில் ஒரு பெண்கள் மேல் நிலைப் பள்ளி மட்டும் நகருக்குப் போதவில்லை; இன்னொரு பெண்கள் மேல் நிலைப்பள்ளி அவசியம் தேவை என்பதைத் தான் மங்கையர் மன்ற உறுப்பினர்களாகிய நாங்கள் தங்கள் நிருபரிடம் தெரிவித்துக் கொண்டோம்.

மன்னார்குடி, ஸரஸ்வதி ஜெயராமன்.



# சுடப்பட்டும் கலங்காத கந்தசாமி!

"சிங்கள ராணுவம் என்னைச் சுட்டது! அது 83, ஜூலை 29 ஆம் தேதி. பத்திரிகைகள் எல்லாம் 'டீவியில் தமிழ் சினிமா காண்பிக்கும் கந்தசாமி சுட்டுக் கொல்லப்பட்டார்' என்றே செய்தி வெளியிட்டிருந்தார்கள்! அவர்கள் சுட்ட போது நான் தலையைக் குனிந்து கொள்ள, கடைச் சிப்பந்திதான் கொல்லப்பட்டார். இலங்கை ராணுவம், நான்தான் புலிப்படைக்குப் புகலிடம் கொடுத்திருக்கிறேன் என்று குற்றம் சாட்டியது. இத்தனைக்கும் அந்த ராணுவத்தினருக்குத் தினசரி உணவு கொடுத்து நட்புடன் இருந்தவர்கள் நாங்கள்!......

"இதற்குப் பிறகு இலங்கையில் நிலைமை இன்னும் குழப்பமாயிற்று. 85 ல் இங்கே சென்னைக்கு வந்தேன். வியாபாரத்தில் காலூன்றினேன். முதலில் எல்லோரும் 'டிஸ்கரேஜ்' செய்தார்கள். 'இலங்கை சிறிய நாடு. அங்கே எப்படியோ ஓர் இடத்தைப் பிடித்து விட்டீர்கள். இந்தியாவில் அதெல்லாம் முடியாது' என்றார்கள். நான் அதை எல்லாம் பொருட்படுத்தவில்லை! 1983 ல், ஸ்பெயினில் மாட்ரிட் நகரில், 163 நாடுகள் பங்கு கொண்ட ஓர் அமைப்பின் ஆதரவில், எங்கள் நிறுவனத்தின் சேவைக்கும், பொருள்களின் தரத்துக்கும் எனக்குப் பரிசு கொடுத்தார்கள். அது சாதாரணமானதல்ல... என் வழியில் நான் உறுதியாக முன்னேற முடியும் என்று தீர்மானமாக இருந்தேன். இதோ, மூன்றே வருடங்களில் அதைச் சாதித்தும் காட்டியிருக்கிறேன்,'' என்று கூறுகிறார், 'லலிதா ஜுவல்லரி' கந்தசாமி.

இலங்கையில் இவர் சீனியர் கேம்ப்ரிட்ஜ் தேறியதும் இவர் தகப்பனார் சொன்னார்:

"நீ பள்ளியில் படித்தது போதும். ஏதாவது பிஸினஸ் ஆரம்பி. வெற்றிலை பாக்குக் கடை வைத்தாலும் சரி...... நீ வியாபாரத்தில் முன்னுக்கு வந்துவிடலாம். உனக்கு எதிர்காலம் நன்றாக இருக்கிறது. ஆரம்பி!" என்று உற்சாகப்படுத்தினார்.

ஒரு குறிப்பட்ட வகுப்பினரே ஈடுபட்டிருந்த தங்க நகை வியாபாரத்தில் இறங்கினார் இளைஞர். அப்பா கொடுத்தது 5000 ரூபாய்தான். அதில் மூவாயிரம் ரூபாய் கவுண்ட்டர் போன்ற கடை அலங்காரத்துக்கே செலவாயிற்று! 'நான் கொடுத்த ரூபாயை இப்படிச் செலவு பண்ணிவிட்டாயே!' என்று வருந்தினார் தகப்பனார். ஆனாலும் என்ன! பல வியாபாரிகளும் ஒத்துழைத்தார்கள். கிரெடிட்டுக்கு வாங்கி நகைகளை விற்று லாபம் கணிசமாகக் கிடைக்கத் தொடங்கியது. வருடத்தில் பத்தாயிரம் ரூபாய்க்கு, உள்ளூர் பத்திரிகைகளில் மட்டும் விளம்பரம் செய்தார் இளைஞர். அப்போது அதுவே அதிகம்! பின்னர் டீவியில் தமிழ் சினிமா ஸ்பான்ஸர் செய்து, வியாபாரத்திலும் உறுதியாக நிலைத்து, நற்பெயர் பெற்று வளர்ந்தபோதுதான் நாடு விட்டு நாடு வந்து எல்லாவற்றையும் அடியிலிருந்து மறுபடி ஆரம்பிக்க வேண்டியதாயிற்று.

ஆயினும் என்ன? "ஒவ்வொரு தொழிலும் கஷ்டமானதுதான். உழைக்க வேண்டும். பாராட்டும், பரிசும் வாங்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்தால் போதும் வெற்றிகரமாக முன்னேறலாம்!'' என்கிறார் கந்தசாமி.

— யெஸ். வி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3156 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—



# எண்ணிப் பாருங்கள்—இன்னும் பத்து ஆண்டுகளில் இவர்கள் எப்படி இருப்பார்கள் என்று.

நீங்களே பெருமிதப்படக்கூடிய வகையில் ஆரோக்கியத்தின் சின்னமாக இவர்கள் திகழக்கூடும். ஏனெனில் தாய் என்ற முறையில் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் இவர்களின் ஒளிமயமான எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நீங்கள் செய்து கொண்டிருக்கின்றீர்கள்.

நீங்கள் காட்டும் அன்பின் முக்கிய அம்சமே இவர்களின் உடல் நலனுக்கு உகந்த ஊட்டச்சத்துகளை முழுமையாகப் பெற்றுத் தருவதுதானே.

ஹார்லிக்ஸ் அளிக்கும் ஊட்டச்சத்து. இவர்களின் வளரும் வயதுக்கேற்ற ஊட்டச் சத்து.



"ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள முக்கிய ஊட்டச்சத்துகள்— புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ் மற்றும் கார்போஹைட்ரேட்ஸ் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிக உகந்தவை.

இதில் சேர்க்கப்பட்டுள்ள கூடுதல் கால்ஷியம் வலுவான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்புகளுக்கும் இன்றியமையாதது.

வளரும் குழந்தையின் வயதுக்கேற்ற தெம்பும், முழுமையான ஆரோக்கியமும் அளிக்கவல்லது."







சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA 6223 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka